


தமிழ்நாடு அரசு

# தமிழ்

## ஐந்தாம் வகுப்பு

தீண்டாமை
மனிதநேயமற்ற செயல் – பெருங்குற்றம்

**பள்ளிக் கல்வித்துறை**

தமிழ்நாடு அரசு
இலவசப் பாடநூல் வழங்கும்
திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது
(விற்பனைக்கு அன்று)

முதல் பதிப்பு : தி.பி. 2042 ; (2011)

( சமச்சீர்க் கல்வி – பொதுப் பாடத்திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்ட நூல் )

## பாடநூல் குழு

### குழுத்தலைவர்

**து. தனுஷ்கோடி,** முதுநிலை விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி பயிற்சி நிறுவனம், காளையார்கோவில் – 630 551

### மேலாய்வாளர்கள்

**க. சு. சங்கீதா,** உதவிப் பேராசிரியர், ஆசிரியர் கல்வி ஆராய்ச்சி பயிற்சி இயக்ககம், சென்னை – 600 006.

**அ. மணமலர்ச்செல்வி,** விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி பயிற்சி நிறுவனம், கீழப்பழுவூர் – 621 707 .பெரம்பலூர்.

### நூலாசிரியர்கள்

**முனைவர் தி. அமலோர்,** விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி பயிற்சி நிறுவனம், இலாஸ்பேட்டை, புதுச்சேரி – 605 008.

**சௌ. வெங்கடமத்வராஜ்,** தலைமை ஆசிரியர், ஊ . ஒ . நடுநிலைப்பள்ளி, மேலத்தட்டப்பாறை, தூத்துக்குடி மாவட்டம்.

**க. உமாதேவி,** தலைமை ஆசிரியர், ஊ . ஒ . நடுநிலைப்பள்ளி,எஸ்.எல்.வி. நகர், சூலூர் ஒன்றியம், கோவை மாவட்டம்.

**புலவர் கோ. தணிகைமலை,** தமிழாசிரியர், அரசு மகளிர் உயர்நிலைப்பள்ளி, தேவிகாபுரம், திருவண்ணாமலை மாவட்டம்.

**இரா. பொன்னுச்சாமி,** தலைமை ஆசிரியர், ஊ. ஒ. தொ. பள்ளி, காரிக்கூட்டம், இராமநாதபுரம் ஒன்றியம்.

**இரா. வனிதா,** தமிழாசிரியர், பாரதிநகர் மன்ற நடுநிலைப்பள்ளி, கணேசபுரம், காரைக்குடி, சிவகங்கைமாவட்டம்.

கணினி அச்சு, வடிவமைப்பு : த.ரகு, விஜயசாரதி

ஓவியம், அட்டைப் படம் : அரஸ்

நூல் அச்சாக்கம்

**தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்,**

**கல்லூரிச் சாலை, சென்னை – 600 006.**

**விலை : ரூ.**

இந்நூல் 80 ஜி. எஸ். எம். மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

ஆப்செட் முறையில் அச்சிட்டோர் :

## தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல பங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஸ மாகே
காஹே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜய ஹே!

– மகாகவி இரவீந்திரநாத் தாகூர்

## நாட்டுப்பண் – பொருள்

இந்தியத் தாயே! மக்களின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற நீயே எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செய்கிறாய்.

நின் திருப்பெயர் பஞ்சாபையும், சிந்துவையும், கூர்ச்சரத்தையும், மராட்டியத்தையும், திராவிடத்தையும், ஒரிசாவையும், வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி அடையச் செய்கிறது.

நின் திருப்பெயர் விந்திய, இமயமலைத் தொடர்களில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை ஆறுகளின் இன்னொலியில் ஒன்றுகிறது; இந்தியக் கடலலைகளால் வணங்கப்படுகிறது.

அவை நின்னருளை வேண்டுகின்றன; நின் புகழைப் பரவுகின்றன.

இந்தியாவின் இன்ப துன்பங்களைக் கணிக்கின்ற தாயே! உனக்கு
வெற்றி! வெற்றி! வெற்றி!

## தமிழ்த்தாய் வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரதக் கண்டமிதில்
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநல் திருநாடும்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந் திலகமுமே!
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!
தமிழணங்கே!
உன் சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே! வாழ்த்துதுமே! வாழ்த்துதுமே!

– 'மனோன்மணியம்' பெ. சுந்தரனார்.

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

'நாட்டின் உரிமை வாழ்வையும் ஒருமைப்பாட்டையும் பேணிக் காத்து வலுப்படுத்தச் செயற்படுவேன்' என்று உளமார நான் உறுதி கூறுகிறேன்.

'ஒருபோதும் வன்முறையை நாடேன்' என்றும், சமயம், மொழி, வட்டாரம் முதலியவை காரணமாக எழும் வேறுபாடுகளுக்கும் பூசல்களுக்கும் ஏனைய அரசியல் – பொருளாதாரக் குறைபாடுகளுக்கும் அமைதி நெறியிலும் அரசியல் அமைப்பின் வழியிலும் நின்று தீர்வு காண்பேன்' என்றும் நான் மேலும் உறுதியளிக்கிறேன்.

## உறுதிமொழி

'இந்தியா எனது நாடு. இந்தியர் அனைவரும் எனது உடன் பிறந்தவர்கள். என் நாட்டை நான் பெரிதும் நேசிக்கிறேன். இந்நாட்டின் பழம்பெருமைக்காகவும் பன்முக மரபுச் சிறப்புக்காகவும் நான் பெருமிதம் அடைகிறேன். இந்நாட்டின் பெருமைக்குத் தகுந்து விளங்கிட என்றும் பாடுபடுவேன்.

என்னுடைய பெற்றோர், ஆசிரியர்கள், எனக்கு வயதில் மூத்தோர் அனைவரையும் மதிப்பேன்; எல்லாரிடமும் அன்பும் மரியாதையும் காட்டுவேன்.

என் நாட்டிற்கும் என் மக்களுக்கும் உழைத்திட முனைந்து நிற்பேன். அவர்கள் நலமும் வளமும் பெறுவதிலேதான் என்றும் மகிழ்ச்சி காண்பேன்.

| இயல் | பாடத் தலைப்பு | பக்கம் |
| --- | --- | --- |
| 1. | வாழ்த்து* | 1 |
| | எனக்கு இறக்கைகள் முளைத்தால்...! | |
| | காடு எம் வீடு | |
| 2. | திருக்குறள்* | 12 |
| | செம்மொழியாம் தமிழ்மொழி | |
| | வாழ்வின் வழிகாட்டி | |
| 3. | திருக்குறள்* | 25 |
| | நெஞ்சை அள்ளும் தஞ்சைப் பெரிய கோயில் (கடிதம்) | |
| | இந்நாள் இனிய நன்னாள்( நாள்குறிப்பு ) | |
| | மூன்று பொற்காசுகள் | |
| 4. | நீதி நெறி விளக்கம்* | 39 |
| | கலை உலகில் கலைவாணர் | |
| | வெற்றியின் முதற்படி | |
| 5. | பெண்கல்வி* | 51 |
| | உணவுத் திருவிழா | |
| | ஒற்றுமையே பலம் | |
| 6. | கும்மியடிப் பெண்ணே கும்மியடி | 61 |
| | சித்திரைப் பொருட்காட்சி | |
| | காடையின் நுண்ணறிவு | |
| 7. | நூறு வயது தருவன! | 70 |
| | களப்பயணம் செல்வோம் | |
| | தன்னம்பிக்கைத் தாத்தா | |
| 8. | பகைவனுக்கு அருள்வாய்* | 81 |
| | போரைத் தடுத்த புலவர் | |
| | உழைப்பே வாழ்வு! | |
| 9. | கனவு தந்த தீர்ப்பு | 95 |
| | அறிவு வளர்ச்சியில் கலைக்களஞ்சியம்! | |
| | விகடகவி தெனாலிராமன் | |

* மனப்பாடப்பகுதி

செய்யுள்

## வாழ்த்து

இயல் –1

திருவடி தொழுகின்றோம் – அன்பொடு
    திருவடி தொழுகின்றோம்
தருமம் தழைத்திடவே
    சத்தியம் ஓங்கிடவே
பருவமழை பொழிந்து
    பயிர்கள் செழித்திடவே
திருவளர் கலையெல்லாம்
    தினமும் வளர்ந்திடவே
அருள்வழி போற்றி மக்கள்
    அனைவரும் வாழ்ந்திடவே (திருவடி...)

– கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

### பாடல்பொருள் :

நாட்டில் அறம் பெருக வேண்டும்; உண்மை நிலைபெற வேண்டும். பருவமழை பொழிந்து பயிர்கள் செழித்து வளர வேண்டும். மேன்மை பொருந்திய கலைகளெல்லாம் வளர வேண்டும். மக்கள் உயிர்களிடத்தில் கருணை கொண்டு வாழ வேண்டும். இவை அனைத்தும் நிறைவேற, இறைவா! உம்மை வணங்குகிறோம்.

### சொல்பொருள் :

தொழுதல் – வணங்குதல்
தருமம் – அறம்
தழைத்திட – பெருகிட, மிகுந்திட
சத்தியம் – உண்மை
ஓங்கு – உயர்ந்து நிலை பெற
திருவளர் கலை – மேன்மை பொருந்திய கலை



### ஆசிரியர் குறிப்பு

பெயர் : தேசிக விநாயகம் பிள்ளை

ஊர் : கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள தேரூர்,

பெற்றோர் : சிவதாணுப் பிள்ளை, ஆதிலட்சுமி

சிறப்புப் பெயர் : கவிமணி

இயற்றிய நூல்கள் : மலரும் மாலையும், மருமக்கள் வழி மான்மியம், உமர்கய்யாம் பாடல்கள்.ஆசிய சோதி,

காலம் : 27–07–1876 முதல் 26–09–1954 வரை

## பயிற்சிகள்

### அ. வகுப்பறையில் பேசுக.

1. நீ எப்போதெல்லாம் இறைவனை வழிபடுவாய் ?
2. நீ இறைவனிடம் என்னவெல்லாம் வேண்டுவாய் ?

### ஆ. பிரித்து எழுதுக.

1. திருவடி = ______________________
2. கலையெல்லாம் = ______________________
3. பருவமழை = ______________________

### இ. கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. தருமம் தழைத்து ____________ ஓங்க வேண்டும்.
2. பயிர்கள் செழித்து வளர ____________ பொழிய வேண்டும்.
3. மக்கள் ____________ வழியில் வாழ வேண்டும்.

### ஈ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. கவிதையைக் குறிக்கும் சொல்

   (அ) உரைநடை (ஆ) பாட்டு (இ) கட்டுரை

2. சத்தியம் என்பதைக் குறிக்கும் சொல்

   (அ) உண்மை (ஆ) பொய்மை (இ) இன்மை

### உ. விடை எழுதுக.

1. கவிமணி இறைவனிடம் வேண்டுவன யாவை ?

## உரைநடை எனக்கு இறக்கைகள் முளைத்தால்..!

சில்லென்று காற்று வீசியது. கீச்... கீச்... என்ற ஒலியுடன் பறவைகள் வானில் அழகாகப் பறந்து கொண்டிருந்தன. இந்தப் பறவைகள் எங்கே செல்கின்றன? எதற்காகச் செல்கின்றன? அவை என் கண்களிலிருந்து மறையும்வரை பார்த்துக் கொண்டிருந்தேன். பறவைகளுக்குக் கட்டுப்பாடு இல்லை. அவை எங்கும் பறந்து திரியலாம். எனக்கும் வானில் பறந்து திரிய ஆசைதான். ஆனால் இறக்கைகள் இல்லையே!

எனக்கு இறக்கைகள் முளைத்தால்..! கண்களை மூடிக்கொண்டேன்.! என் உடம்பில் ஏதோ மாற்றம் ஏற்படுகிறது. ஆ! எனக்கு இறக்கைகள் முளைத்து விட்டன. அழகிய மென்மையான பட்டுப் போன்ற இறக்கைகள். இறக்கைகளை அசைத்தேன். காற்றில் மிதப்பது போல் இருக்கிறதே! புதிய உணர்வு. என்னால் இப்போது பறக்க முடியும்! என்னால் இப்போது பறக்க முடியும்! திரும்பத் திரும்பக் கூறினேன்.



சிறகடித்து விண்ணில் பறந்தேன். மேலிருந்து பார்த்த போது ஆ! மனிதர்கள் சிற்றெறும்புகளாய், வீடுகள் சின்னஞ்சிறு பெட்டிகளாய், சாலைகள் கருங்கோடுகளாய்க் காட்சியளித்தன. கதிரவனின் கதிர்கள் வெப்பத்தை வீசின. எனக்குத் தாகம் எடுத்தது.

அதோ குளம்! அங்குச் சென்று நீர் அருந்தலாம் என எண்ணிக் குளத்தை அடைந்தேன். குளம் மிகவும் தூய்மையற்று இருந்தது. குளத்தில் குப்பைக் கூளங்கள், நெகிழிப் புட்டிகள், நெகிழிப் பைகள் மிதந்து கொண்டிருந்தன. குளத்துநீர், பாசிபடர்ந்து நுரைத்துக் கழிவு நீர் போல விரும்பத் தகாத கெட்டமணம் வீசியது. குளத்தைச் சுற்றியுள்ள மரங்கள் வெட்டப்பட்ட நிலையில் மொட்டை மரங்களாய்க் காட்சி அளித்தன.

"காடு செழித்தால் மழை பொழியும்"
"மழை பொழிந்தால் மண் குளிரும்"
"மழை பெற மரங்கள் வேண்டும்"

என்பதை அறியாமல் மனிதர்கள் இத்தவறுகளைச் செய்கிறார்கள். என் நீர்வேட்கையை எவ்வாறு தணிப்பது ? வேதனையுடன் பறந்தேன்; கீழே பார்த்தேன்; பெரிய நகரம். தொழிற்சாலைகளிலிருந்து அமிலப்புகை வெளியேறிக்கொண்டிருந்தது. நகரமே மங்கலாகத் தெரிந்தது. எனக்குக் கண் எரிச்சல், மூச்சுத் திணறல் ஏற்பட்டது.



புகை மண்டலத்தை விரைவாகக் கடந்தேன். வாகனங்கள், தொழிற்சாலைகள் வெளிவிடும் புகை மனிதர்களுக்குப் பல்வேறு நோய்களைத் தரும். காற்று மாசுபடும் இந்நிலை தொடர்ந்தால் நுரையீரல் புற்றுநோய், மூச்சுக் கோளாறு, சளித்தொல்லை முதலியவற்றிற்கு வழிவகுக்கும். அமிலமழை பெய்யும்; தாவரங்கள் கருகும்.

மனிதர்கள் மீது அமிலமழை விழுந்தால் உடம்பெல்லாம் புண்ணாகுமே! பிறக்கப்போகும் குழந்தைகள்கூட ஊனமாகப் பிறக்குமே! நினைத்தாலே நெஞ்சு பதறுகிறது.மீண்டும் விண்ணில் பறந்தேன்; கீழே பார்த்தேன்; ஆறு ஓடிக்கொண்டிருந்தது. ஆனால், அது சாக்கடையாய்க் காட்சியளித்தது. தொழிற்சாலைகளின் வேதிக்கழிவுகள், சாயப்பட்டறைகளின் கழிவுகள் போன்றவை ஆற்றில் கலந்து கொண்டிருந்தன. இந்த நீரை மனிதர்கள் குடித்தால் சீறுநீரகக் கோளாறுகள், மஞ்சள் காமாலை, காய்ச்சல், வாந்தி, பேதி, முதலிய பல நோய்கள் ஏற்படுமே! நிலமும் பாழ்! நீரும் பாழ்! காற்றும் பாழ்!

எனக்குத் தாகம் மிகுந்தது; கவலையோடு பறந்தேன். அப்போது பறவைகள் கூட்டங்கூட்டமாய்ப் பறந்து சென்று கொண்டிருந்தன. அவற்றைப் பின்தொடர்ந்தேன்; நீண்ட தூரம் சென்றேன். அதோ! உயர்ந்த மலைத்தொடர். குளிர்ந்த காற்று இதமாக வீசியது. மலைமுகடுகளில் மேகக்கூட்டங்கள் தவழ்ந்து கொண்டிருந்தன. அவற்றின் நடுவே பறந்தேன்.



அங்கு நான் கண்டவை: மூலிகை மணம் கலந்த தூய காற்று; நெடிதுயர்ந்த மரங்கள்; பல வண்ணப் பூக்களைச் சுமந்து நிற்கும் தாவரங்கள்; பசுமையான செடிகொடிகள்; அழகழகாய் பல வண்ணங்களில் வண்ணத்துப் பூச்சிகள்; தேனீக்கள், வண்டுகளின் இன்னொலிகள்; பல வண்ணப் பறவைகளின் ஒலிகள்; ஆர்ப்பரிக்கும் அருவிகள்; சலசலக்கும் ஓடைகள்; பசுமையான புல்வெளிகள்.

அங்கே யானைகள், மான்கள், காட்டெருமைகள் ஆகியவற்றைக் கண்டு மகிழ்ந்தேன்; கீழே இறங்கினேன்; தெளிந்த நீரோடையில் தாகம் தீர நீரைக் குடித்தேன்; அந்நீர் மிகுந்த சுவையாக இருந்தது. இயற்கையை எண்ணியெண்ணி வியந்தேன். இந்த நீரோடைகள்தாமே நகரத்தில் ஆறுகளாக ஓடி வருகின்றன; ஆனால், இவ்வளவு சுவையான நீர் அங்குக் கிடைப்பதில்லையே, என்ன காரணம் ? இந்தத் தூய்மையான நீரும், தூய்மையான காற்றும் அனைவருக்கும் கிடைக்க என்ன செய்யலாம் ? எனச் சிந்தித்த போது......

"மங்கை! எழுந்திரு, தூங்கியது போதும்" என்றாள் அம்மா.

| மங்கை செய்த சிந்தனை என்னவாக இருந்திருக்கும் ? |
|---|

## பயிற்சிகள்

### சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| அமிலப் புகை | – | நச்சுத்தன்மை கலந்த புகை |
| வேதிக் கழிவு | – | நச்சுத்தன்மை உடைய கழிவுப்பொருள் |
| சாயப் பட்டறை | – | வண்ணமேற்றும் தொழிற்சாலை |
| நெடிதுயர்ந்த | – | மிக உயரமான |



### I. அ. வகுப்பறையில் பேசுக.

1. நான் ஊர்த் தலைவரானால்...
2. எனக்கு இறக்கைகள் முளைத்தால் ...
3. யார் கண்ணுக்கும் தெரியாமல் மறையும் ஆற்றல் எனக்குக் கிடைத்தால் ...

### ஆ. பொருளறிக.

இப்பாடப் பகுதியில் இடம்பெற்றுள்ள புதிய சொற்களாக நீ கருதுவனவற்றை அடிக்கோடிடுக. அதற்கு உரியபொருளை அகரமுதலியில் பார்த்து எழுதுக.

### இ. வரைக.

இப்பாடத்தில் நீ புரிந்து கொண்ட செய்தியைக் கருத்துப் படமாக வரைக.

### ஈ. பிரித்து எழுதுக.

1. கருங்கோடு = ____________________
2. உடலெல்லாம் = ____________________
3. காட்டெருமைகள் = ____________________
4. கடற்கரை = ____________________
5. நீரோடை = ____________________

### உ. கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. மழை பெற ______________________________ வளர்க்க வேண்டும்.
2. தொழிற்சாலைகளிலிருந்து __________________ புகை வெளிவருகிறது.
3. சாயப் பட்டறைகளிலிருந்து ____________________ நீரில் கலக்கின்றன.
4. கூண்டுகள் ________________________________ எழுப்பும்.
5. மலைமுகடுகளில் ____________________ கூட்டங்கள் தவழ்கின்றன.

### ஊ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.



1. முகடு என்பதன் பொருள்

   (அ) உயரம் (ஆ) உச்சி (இ) நீளம்

2. அருவி என்பதன் பொருள்

   (அ) வாய்க்கால் (ஆ) ஆறு (இ) மலையின்வீழ் நீர்

3. தணித்தல் என்பதன் பொருள்

   (அ) அதிகமாக்குதல் (ஆ) குறைத்தல் (இ) உயர்த்தல்

4. தொழிற்சாலையின் வேதிக்கழிவுகள் __________________ கலந்து கொண்டிருந்தன.

   (ஆ) ஆற்றுக்கு (ஆ) ஆற்றால் (இ) ஆற்றில்

### எ. சொற்றொடரில் அமைத்து எழுதுக.

1. புதுமை : ________________________________
2. எண்ணியெண்ணி : ________________________________
3. விண்ணில் : ________________________________

### ஏ. விடை எழுதுக.

1. மங்கை கனவில் கண்ட குளம் எவ்வாறு காட்சியளித்தது ?
2. மங்கை மனம் வருந்தக் காரணம் என்ன ?
3. தொழிற்சாலைகள் வெளிவிடும் புகையால் ஏற்படும் பாதிப்புகள் யாவை ?
4. மங்கை கண்ட இயற்கைவளம் பற்றிக் கூறுக.

## II. மயங்கொலிகள் அறிக.

### அ. உரிய ஒலிப்புடன் வாய்விட்டுப் படிக்க.

1. அப்பா வேலை முடிந்து மாலை வேளையில் வீட்டுக்குத் திரும்புவார்.
2. மலை அடிவாரத்தை அடைந்தேன்; மழை பெய்யத் தொடங்கியது.
3. கந்தன் காலையில் வயலுக்குச் சென்றான்; காளைகளை ஏரில் பூட்டினான்.
4. வானில் மின்னல் ஒளி பளிச்சிட்டது. இடி இடித்த ஒலி கேட்டது.
5. கிளி அழகான பறவை; அதன் அலகு சிவப்பாக இருக்கும்.

### ஆ. வேறுபாடு அறிக.

அழகு = எழில்

அலகு = பறவையின் மூக்கு

கலை = ஓவியம் முதலிய நுண்கலைகள்

களை = தேவையற்ற புல் வகைகள்

ஒலி = சத்தம்

ஒளி = வெளிச்சம்

ஒழி = இல்லாமல் போதல்

வால் = ஓர்உறுப்பு

வாள் = ஒரு கருவி

வேலை = பணி

வேளை = காலம்

தலை = ஓர் உறுப்பு

தழை = இலை

தளை = கட்டு

### இ. பொருத்தமான சொல்லை எடுத்து எழுதுக.

1. யானை மிகுந்த ______________ உள்ள விலங்கு. (பலம் / பழம்)
2. பலம் இல்லை என்றால் ___________ தூக்க முடியாது. (பளு / பழு)
3. பள்ளி மணி __________________ (ஒலித்தது / ஒளித்தது)
4. யாழினி ___________________ உயர்ந்த ஆடைகளை அணிந்திருந்தாள். (விலை / விளை)
5. எலி __________________ வாழ்கிறது. (வலையில் / வளையில்)
6. ஓவியர் வண்ணங்களைக் ______________ (குழைத்தார் / குலைத்தார்)

### ஈ. பிழைகளை நீக்கி எழுதுக

அதிகாளையில் கோலி கூவும். கதிரவன் உதயமாகும் பொலுது நாம் கண் விலிக்க வேண்டும். ஆதுவே மிகச் சிறந்த பலக்கமாகும்.

______________________________

______________________________

______________________________

## உ. ஒத்த ஒலிப்புடைய சொற்களைக் கொண்டு நிரப்புக.

1. வட்டமான தட்டு
   தட்டு நிறைய ______________________



2. அப்பா வாங்கினார் நுங்கு – அதை
   அனைவருக்கும் போட்டார் ______________________





3. பள்ளி சென்றாள் செல்வி – அங்கு
   பாங்காய்க் கற்றாள் ______________________

## ஊ. மலைத் தொடரின் ஒரு பகுதி. இதனை வருணிக்கவும்.



### செயல்திட்டம்.

- தொலைக்காட்சியில் தலைவர்கள், மற்றும் அறிஞர்கள் பேசும் பேச்சுகளைக் கேட்டறிந்து வந்து வகுப்பறையில் கூறுக.
- சிறுவர் இதழ்களிலிருந்து கதைகளைத் தொகுத்து வருக.

துணைப்பாடம்

# காடு எம் வீடு

சுட்டெரிக்கும் வெயில். காட்டில் உள்ள விலங்குகளும் பறவைகளும் ஓரிடத்தில் கூடின. தலைவனான புலி, "எல்லாரும் நான் சொல்வதைக் கேளுங்கள். நாம் உயிர் வாழ நீர் வேண்டும். ஆனால், மழை அவ்வளவாகப் பெய்வதில்லை. இதற்கெல்லாம் காரணம் காடுகள் அழிவதே" என்றது.

அப்போது யானை வலம் இடமாகத் தலையை ஆட்டிக்கொண்டு "காட்டை நாம் அழிப்பதில்லை! மனிதர்கள்தாம் மரங்களை வெட்டி, காட்டை அழிக்கிறார்கள்" என்று புலம்பியது.



“ உண்மை! காட்டை அழிப்பது மனிதர்களே! அவர்கள் தங்கள் எதிர்கால வாழ்க்கையை நினைத்துப் பார்ப்பதில்லை. அவர்களாகத் திருந்தினால் தான் உண்டு” என்றது புலி. பறவைகளும் விலங்குகளும் தலையை மேலும் கீழும் ஆட்டி அதை ஏற்றுக்கொண்டன.

“காடுகளை வளர்க்க நாங்கள் என்ன செய்ய வேண்டும் ?” எனப் பறவைகள் கேட்டன. “கிளிகளே! கிடைக்கும் பழங்களையெல்லாம் உண்டு அவற்றிலுள்ள விதைகளைக் காடெல்லாம் பரப்புங்கள்” என்றது புலி.

அப்போது காகங்கள், “ புலி அண்ணா ! நாங்கள் வேம்பு, ஆல், அத்தி, அரசு ஆகியவற்றின் பழங்களை விதையுடன் தின்று நிலத்தில் எச்சமிட்டுப் பரப்புகிறோம்” என்றன.

“நாங்கள் தும்பிக்கையால் தண்ணீர் ஊற்றுகிறோம் விதைகள் முளைக்கட்டும்; செடிகள் வளரட்டும்; மரங்கள் வளர்ந்து காடே பசுமையாகட்டும்” என்றன யானைகள். “இரவு பகலாகக் காட்டைக் காவல் காக்கும் பொறுப்பு எங்களுடையது” என்றன நரிகள்.

“நாம் அனைவரும் உயிர்மூச்சாகக் கொண்டு காட்டைக் காப்போம்” என்றது புலி. சில ஆண்டுகள் கழிந்தன. காடெங்கும் பசுமை! பசுமை.....! திடீரென்று வானம் இருண்டது. மழை கொட்டோ கொட்டென்று கொட்டியது. காட்டில் உள்ள நீர்நிலைகள் அனைத்தும் நிரம்பின. விலங்குகளும் பறவைகளும் மகிழ்ச்சியால் ஆடிப் பாடின. அவை புதியதோர் உலகை உருவாக்கிவிட்டன. ஆனால் மனிதன் ?

**சிந்தித்துப் பேசுக**

- பாடப்பகுதியிலிருந்து நீ உணர்ந்து கொண்ட செய்தி பற்றிக் கூறுக.
- மரம் வளர்க்க நாம் செய்ய வேண்டுவன பற்றிக் கூறுக.

புவி வெப்பமயமாதலைத் தடுக்கப் மரக்கன்றுகள் நட்டு வளர்ப்போம்.

செய்யுள்

# திருக்குறள்

இயல் – 2

## வான்சிறப்பு

1. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

பாடல்பொருள் :

உண்பவர்க்கு வேண்டிய உணவுப் பொருள்களை மழை விளைவித்துத் தருகிறது; தானும் ஓர் உணவுப்பொருளாகவும் (குடிநீர்) விளங்குகிறது.

சொல்பொருள் :

துப்பார்க்கு – உண்பவருக்கு
துப்பு – உணவு
துப்பாக்கி – உணவுப் பொருள்களை விளைவித்து
துப்பாய தூஉம் – தானும் ஓர் உணவாகவும்

2.விசும்பின் துளிவீழின் அல்லால் மற்றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது.

பாடல்பொருள் :

வானத்திலிருந்து மழை பெய்யாவிட்டால் உலகில் பசும்புல் தலையையும் காண்பது அரிதாகிவிடும்.

சொல்பொருள் :

விசும்பு – வானம்
துளி – மழைத்துளி

## விருந்தோம்பல்

1. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.

பாடல்பொருள் :

நாள்தோறும் தன்னை நாடிவரும் விருந்தினரைப் பாதுகாப்பவனுடைய வாழ்க்கை, துன்பம் வந்தபோதும் கெடுவதில்லை.

சொல்பொருள் :

வைகலும் – நாள்தோறும்
ஓம்புவான் – பாதுகாப்பவன்
பருவந்து – துன்புற்று
பாழ்படுதல் – வீணாதல்
இன்று – இல்லை

2. மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.



பாடல்பொருள் :

அனிச்ச மலர் முகர்ந்த அளவில் வாடும். விருந்தினரின் முகமோ மாறுபட்டுப் பார்த்த அளவிலேயே வாடிவிடும்.



சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| மோப்ப | – | முகர்ந்து பார்க்க |
| குழையும் | – | வாடும் |
| திரிந்து | – | மாறுபட்டு |
| நோக்க | – | பார்க்க |

## கேள்வி

1. எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

பாடல்பொருள் :

எந்தச் செய்தியாயினும் ஒருவன் நல்லவற்றையே கேட்டறிய வேண்டும். எல்லா வகையிலும் அக்கேள்வியறிவே அவனுக்குச் சிறந்த பெருமையைக் கொடுக்கும்.

சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| எனைத்தானும் | – | எவ்வளவு சிறியதாயினும் |
| அனைத்தானும் | – | அந்த அளவிற்கு ( கேட்ட அளவிற்கு ) |
| ஆன்ற | – | நிறைந்த |

2. நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது.

பாடல்பொருள் :

நுட்பமாகக் கேட்டறியும் திறனைப் பெறாதவர் பணிவு மிக்க சொற்களைப் பேசுபவராக இருத்தல் இயலாது.

சொல்பொருள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நுணங்கிய | – | நுட்பமான | அரிது | – | இயலாது. |
| அல்லார் | – | அல்லாதவர் | | | |

**ஆசிரியர் குறிப்பு :**



பெயர் – திருவள்ளுவர்

காலம் – கி.மு.31

வேறுபெயர்கள் – தெய்வப் புலவர், செந்நாப்போதார், பொய்யில் புலவர்

## பயிற்சிகள்

**அ. வகுப்பறையில் பேசுக.**

1. மழைநாளில் உன் அனுபவம் குறித்துப் பேசுக.
2. உன் வீட்டிற்கு வரும் விருந்தினர்களை எவ்வாறு வரவேற்று விருந்தளிப்பாய் ?
3. தொலைக்காட்சியில் நீ கேட்ட திருக்குறள் விளக்கத்தினை விவரிக்க.
4. பணிவுடைய சொற்களைப் பேசிப்பழகத் தேவையானவை பற்றிக் கூறுக.

**ஆ. பிரித்து எழுதுக.**

1. துப்பாய = ____________________
2. மற்றாங்கே = ____________________
3. முகந்திரிந்து = ____________________
4. கேள்வியரல்லார் = ____________________
5. வாயினராதல் = ____________________

**இ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.**

1. முகர்ந்து பார்த்தாலே வாடும் மலர்.

   (அ) சூரியகாந்தி மலர் (ஆ) அனிச்சமலர் (இ) முல்லை மலர்

2. நல்லன வற்றைக் கேட்பதனால் கிடைப்பது.

   (அ) கயமை (ஆ) பெருமை (இ) சிறுமை

3. விசும்பு என்பதைக் குறிக்கும் சொல்.

   (அ) நிலம் (ஆ) காற்று (இ) வான்

**ஈ. விடை எழுதுக.**

1. மழையினால் நாம் பெறும் பயன்கள் யாவை ?
2. பூமியில் எப்போது புல் கூட முளைக்காது ?
3. துன்பத்தால் வருந்திக் கெடாதவர் யார் ?
4. விருந்தினர் எப்போது, எப்படி வாடுவர் ?
5. நுட்பமாகக் கேட்டறியும் திறனால் பெறும் நன்மைகள் யாவை ?

உரைநடை

# செம்மொழியாம் தமிழ்மொழி

## ( கருத்தரங்கம் )

தென்றல் : இன்றைய இலக்கியமன்றத் தொடக்க விழாவினை நம் பள்ளித் தலைமையாசிரியர் அவர்களைத் தலைமை ஏற்று நடத்திக் கொடுக்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

அழகன் : நான் அதை வழிமொழிகிறேன்.

தென்றல் : தமிழ்த்தாய் வாழ்த்து.

(அனைவரும் எழுந்து நின்று பாடுதல்)

தலைமை
ஆசிரியர் : ஆசிரியப் பெருமக்களே! அன்புக் குழந்தைகளே! அனைவர்க்கும் என்னுடைய அன்பு வணக்கம். செம்மொழியாம் நம் தமிழ்மொழி அளப்பரிய சிறப்புகளைக் கொண்ட அமுதமொழி. தமிழ் மொழியின் சிறப்புகளில் தொன்மை, இனிமை என்னும் தலைப்புகளில் பேச உள்ள உங்களைக் கண்டு பெரிதும் அகமகிழ்கிறேன். உங்களுக்கு என் பாராட்டுகளும் வாழ்த்துகளும்.

தென்றல் : 'தமிழின் தொன்மை' என்னும் தலைப்பில் தன் கருத்துகளை எடுத்துரைக்க மாணவி முல்லையை அழைக்கிறேன்.

முல்லை : அவையோர்க்கு வணக்கம். உலகில் ஆறாயிரத்திற்கும் மேற்பட்ட மொழிகள் உள்ளன. அவற்றுள் செம்மொழியாக அறிவிக்கப்பட்ட மொழிகள் ஆறு. அவை கிரேக்கம், இலத்தீன், சீனம், ஈப்ரூ, அரேபியம், சமற்கிருதம் ஆகியன. நம் தாய்மொழியாம் தமிழோ, காலத்தால் முந்தையது. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் 'தொன்மை, தாய்மை, வளமை, இளமை, இனிமை, நுண்மை முதலிய சிறப்புகளைக் கொண்டது தமிழ்மொழி' என்றும், 'தமிழே, உலகின் முதன் மொழி, மூத்த மொழி' என்றும் குறிப்பிடுகிறார். உலக அளவில் தமிழ் மொழியைச் செம்மொழியாக அறிவிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

அமெரிக்க மொழியியல் அறிஞரான நோம்சாம்சுகி, 'உலக மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி தமிழாகத்தான் இருக்கவேண்டும்' என்று கூறியுள்ளார்.




தேனி மாவட்டம் புலிமான் கோம்பை மற்றும் தாதப்பட்டி என்னும் ஊர்களில் கிடைத்த நடுகல் கல்வெட்டுகள்



இயல்பு



நிறமாற்றம்



செப்பம்

திருமுருகாற்றுப்படை எழுதப்பட்ட ஓலைச்சுவடி

பூம்புகாரை ஒட்டிய கடற்பகுதியை ஆய்வு செய்த அறிஞர் ஒருவர் தமிழ்க் கல்வெட்டு ஒன்றைக் கண்டுபிடித்தார். அவர் தமிழ்மொழி பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முந்தையது என்று தெரிவித்துள்ளார். கிரேக்க இலத்தீன் மொழிகளில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ்ச் சொற்கள் இருப்பதை ஞானகிரியார் என்னும் அறிஞர் எடுத்துக் காட்டியிருக்கிறார்.





பழனி – பொருந்தல் அகழ்வாய்வில் கிடைக்கப்பெற்ற சுடுமண் பொம்மைகள்

தமிழ்மொழி, தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலைப் பெற்றுத் திகழ்கிறது. தமிழ்மொழி எப்போது தோன்றியது என்னும் வினாவுக்கு விடை கூறுவது கடினம்.

இதையே பாரதியார்,

'தொன்று நிகழ்ந்த தனைத்தும் உணர்ந்திடு
சூழ்கலை வாணர்களும் – இவள்
என்று பிறந்தவள் என்றுண ராத
இயல்பினளாம் எங்கள் தாய்' என்று பாடியுள்ளார்.

நம் தமிழ்மொழி உலகில் வேறு எந்த மொழியும் பெற்றிடாத பெருஞ்சிறப்புகளைப் பெற்றது; இரண்டாயிரத்து எழுநூறு ஆண்டுகள் தொடர்ச்சியான இலக்கண இலக்கியங்களைக் கொண்டுள்ள கருவூலம், உலகின் முதல் மொழியாகவும் செவ்வியல் மொழியாகவும் செம்மொழியாகவும் திகழ்கிறது. அதைப் போற்றி வளர்ப்போம். நன்றி, வணக்கம்!



தமிழரின் பழங்கால நாணயங்கள் அணிகலன்கள்

தென்றல் : 'தமிழின் இனிமை' என்னும் தலைப்பில் கருத்துக்களை வழங்க மாணவன் மணவாளனை அழைக்கிறேன்.

மணவாளன் : அவையோரை வணங்குகிறேன். உலக மொழிகளுள் மிகுந்த அழகும் திருத்தமும் ஒழுங்கும் கொண்டது தமிழ். தமிழ் என்னும்சொல்லுக்கு இனிமை என்று பொருள்.தமிழ் என்னும் சொல்லிலேயே வல்லினம், மெல்லினம், இடையினம் ஆகிய மூன்றும் இடம்பெற்றுள்ளன.

தமிழ், தமிழ், தமிழ் எனப் பன்முறை அடுக்கிக் கூறினால் அமிழ்து என்றும் அமிழ்து, அமிழ்து, அமிழ்து எனக் கூறும்போது தமிழ் என ஒலிப்பதும் தமிழின் இனிமையாகும். தமிழ் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழைக் கொண்டது. தமிழ்மொழியைக் குறிக்க அருந்தமிழ், செந்தமிழ், பைந்தமிழ், தீந்தமிழ், தென்தமிழ், வண்டமிழ், தண்டமிழ், நற்றமிழ், நெடுந்தமிழ், அன்னைத்தமிழ், கன்னித்தமிழ், சங்கத்தமிழ், போன்ற நூற்றுமுப்பது சிறப்பு அடைமொழிகள் உள்ளன.

ஈடு இணையற்ற சொல்வளமும் கருத்துச் செறிவும் மிக்கது தமிழ்மொழி. ஈ, வா, கை, தை, வை, பை, மை முதலிய நாற்பத்திரண்டு ஓரெழுத்துச் சொற்களும் ஒருபொருள் குறித்த பல சொற்களும் தமிழில்தான் மிகுதியாக உள்ளன. ஒரு கருத்தைப் பிறருக்குத் தெரிவிக்கும் செயலுக்கு, கூறுதல், செப்புதல், உரைத்தல், மொழிதல், பகர்தல், விளம்புதல், அறைதல், இயம்புதல், நவிலுதல் முதலான நாற்பது சொற்கள் உள்ளன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறுங்காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் எனப் பல்வகை இலக்கியங்களைப் பெற்றுள்ளது தமிழ்.

'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்
இனிதாவது எங்கும் காணோம்',
– என்று பாரதியாரும்,
'இனிமைத் தமிழ்மொழி எமது – எமக்கு
இன்பம் தரும்படி வாய்த்த நல்அமுது'
– என்று பாரதிதாசனும்

தமிழின் இனிமையைப் பறைசாற்றுகின்றனர்.

வான்புகழ் வள்ளுவரின் திருக்குறள், எந்நாட்டவர்க்கும் எக்காலத்திற்கும் பொருந்தும்படியான பொதுமைக் கருத்துகளைக் கூறுவதால், 'உலகப் பொதுமறை' எனப் போற்றப்படுகிறது. 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்', 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்னும் உயரிய கருத்தினை உலகிற்கு உணர்த்தியது நம் தமிழ்மொழி. தமிழர்களின் விருந்தோம்பலும், ஒருவனுக்கு ஒருத்தி என்ற பண்பாடும் உலகமே வியந்து பார்க்கும் உயர்ந்த பண்புகள். நம் பண்பாட்டின் வழி நாம் நடப்போம்; நாளும் தமிழின் இனிமையைச் சுவைப்போம்! நன்றி, வணக்கம்.

தலைமைஆசிரியர் :

நம் பள்ளி மாணவர்கள் முல்லையும் மணவாளனும் தமிழின் தொன்மை, தமிழின் இனிமை பற்றி மிகச் சிறப்பாகப் பேசினார்கள்.




2008 மே 19ஆம் நாள் முதல் சென்னையில் இயங்கி வரும் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தில் தமிழ், தமிழரின் தொன்மை, பண்பாடு, நாகரிகம், கலைகள், இலக்கியம் குறித்த ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

மாணவச்செல்வங்களே, நம் தமிழ்ச் செம்மொழிக்குச் சிறப்புச் சேர்க்க, குழந்தைகளுக்குத் தமிழிலேயே பெயர்சூட்ட வேண்டும். ஊர்ப்பெயர்கள், தெருப்பெயர்கள், கடைப்பெயர்கள் தமிழில் இருக்கவேண்டும். ஒவ்வொருவரும் தம் பெயரின் முன் எழுத்துகளைத் தமிழிலேயே எழுத வேண்டும். கையொப்பமிடும் போதும் தமிழிலேயே இடவேண்டும். தமிழர்களிடம் தமிழிலேயே பேச வேண்டும். நம் எழுத்திலும் பேச்சிலும் தமிழ்மணம் கமழ வேண்டும். எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்னும் நிலை மலரப் பாடுபடவேண்டும். நன்றி, வணக்கம்!

மாணவன் அழகன் நன்றி நவில, நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவுற்றது.

### சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| தொன்மை | = | பழைமை |
| முந்தையது | = | முற்பட்டது |
| செம்மொழி | = | செம்மையான மொழி |
| தீந்தமிழ் | = | இனிமையான தமிழ் |
| காப்பியங்கள் | = | கதை பொதிந்த தொடர்நிலைச் செய்யுள் |
| கேளிர் | = | உறவினர் |
| பண்பாடு | = | பண்பட்ட நடத்தை, ஒழுக்கம் |
| விருந்தோம்பல் | = | விருந்தினரைப் பேணுதல் |
| நவிலல் | = | கூறுதல் |

## பயிற்சிகள்

### I. அ. வகுப்பறையில் பேசுக.

1. தமிழின் இலக்கிய வளம், தமிழரின் விருந்தோம்பல் போன்றவை குறித்துக் குறிப்புகள் எழுதி வந்து சிறு குழுவில் பேசுக.
2. பாரதியார், பாரதிதாசன் பாடல்களுள் உனக்குத் தெரிந்த பாடலை ஓசை நயத்துடன் பாடுக.

## ஆ. பிரித்து எழுதுக.

1. செம்மொழி = ____________
2. ஆறாயிரம் = ____________
3. நிகழ்ந்ததனைத்தும் = ____________
4. என்றுணராத = ____________
5. தண்டமிழ் = ____________

## இ. சேர்த்து எழுதுக.

1. பத்து + பாட்டு = ____________
2. தீம் + தமிழ் = ____________
3. யாம் + அறிந்த = ____________
4. எ + நாட்டவர்க்கும் = ____________
5. விருந்து + ஓம்பல் = ____________

## ஈ. கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. உலகில் ____________ மேற்பட்ட மொழிகள் உள்ளன.
2. தமிழ்மொழியின் முதல் இலக்கண நூல் ____________.
3. முத்தமிழ் என்பது இயல், இசை, ____________.
4. திருக்குறள் ____________ எனப் போற்றப்படுகிறது.

## உ. சொற்றொடரில் அமைத்து எழுதுக.

1. இனிமை : ____________
2. உயர்வு : ____________
3. மொழி : ____________

## ஊ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. விண்மீன்களைக் குறிக்காத ஒரு சொல்

   (அ) திங்கள் (ஆ) மதி (இ) சூரியன்

2. சொல்லுதல் என்னும் பொருளைக் குறிக்காத ஒரு சொல்

   (அ) நட்சத்திரம் (ஆ) தாரகை (இ) பூமி

3. நிலவைக் குறிக்காத ஒரு சொல்

   (அ) கூறுதல் (ஆ) மொழிதல் (இ) கேட்டல்

## எ. விடை எழுதுக.

1. தமிழ் மொழி பற்றித் தேவநேயப் பாவாணர் கூறுவது யாது ?
2. தமிழ் இலக்கியங்களின் வகைகள் சிலவற்றை எழுதுக.
3. தமிழ் மொழி எவ்வாறெல்லாம் போற்றப்படுகிறது ?
4. தமிழின் தொன்மை குறித்து எழுதுக.
5. தமிழின் இனிமையைப் பற்றி பாரதியார் கூறியவை யாவை ?

## II. அ. மரபுச்சொற்கள் அறிக.

நம் முன்னோர் ஒரு பொருளை எச்சொல்லால் எவ்வாறு வழங்கினரோ அப்பொருளை அவ்வாறே நாமும் வழங்குவது மரபு.

**1. ஒலி மரபு அறிக.**

**அ. விலங்குகள்**

1. யானை பிளிறும்
2. நாய் குரைக்கும்
3. புலி உறுமும்
4. சிங்கம் முழங்கும்
5. குதிரை கனைக்கும்

**ஆ. பறவைகள்**

1. மயில் அகவும்.
2. குயில் கூவும்
3. கோழி கொக்கரிக்கும்
4. சேவல் கூவும்
5. ஆந்தை அலறும்

**2. இளமைப் பெயரை அறிக.**

1. எலி – குஞ்சு
2. பசு – கன்று
3. புலி – போத்து
4. அணில் – பிள்ளை
5. சிங்கம் – குருளை

**3. வினைமரபுச் சொற்களை அறிக.**

1. பானை உடைந்தது
2. மரக்கிளை முரிந்தது
3. துணி கிழிந்தது
4. வெடி வெடித்தது

## ஆ. குறிப்புகளைக் கொண்டு பழமொழியைக் கண்டுபிடிக்க.

(எ.கா.) ஓவியம் வரையவும், தமிழ்மொழியைக் கற்கவும் நல்ல பயிற்சி வேண்டும்.

பழமொழி – சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்.

1. முழுமையாகக் கற்று அறிந்தவர்கள் யாரும் இல்லை. உலகில் நாம் கற்க வேண்டியவை இன்னும் நிறைய உள்ளன.

______________________________

2. நம் வேலைகளை நாமே செய்து கொள்ள வேண்டும்.

______________________________

3. கடல்கடந்து சென்றும் செல்வத்தைத் தேட வேண்டும்.

______________________________

4. இளம் வயதில் கல்வி கற்பது கல்லில் செதுக்கப்பட்ட எழுத்துப்போல் நிலைத்திருக்கும்.

______________________________

5. நோயில்லாமல் வாழ்வது, நமக்குப் பெருஞ் செல்வம் .

______________________________

## இ. பிறமொழிச் சொற்களை நீக்கி எழுதுக.

நான் ஆன்டி வீட்டுக்குப் போனேன். கேட் மூடியிருந்தது. காலிங் பெல்லை அழுத்தினேன். அங்கிள் வந்தார். கம்மின் என்றார்.

## ஈ. பொருத்தமான இடங்களில் நிறுத்தற் குறி இடுக.

1. இஃது என் தமிழ்ப்பாடநூல்
2. அஃது உன் பாடநூலா
3. ஆஆ இந்த ஓவியம் எத்துணை அழகாக இருக்கிறது
4. சிறுதுளி பெருவெள்ளம் என்பது பழமொழி
5. காட்டில் மான்கள் நரிகள் புலிகள் யானைகள் முதலியவை வசிக்கின்றன

## உ. முடிவே தொடக்கம். நீங்களும் உருவாக்கலாமே.

| | | |
|---|---|---|
| உலகு | கணக்கு | கரும்பு |
| கும்மி | ______ | ______ |
| மிளகு | ______ | ______ |
| குளவி | ______ | ______ |
| விருந்து | ______ | ______ |
| தும்பி | ______ | ______ |
| பிறப்பு | ______ | ______ |
| புன்னகை | ______ | ______ |

## ஊ. அழைப்பிதழ், நிகழ்ச்சி நிரலைப் படிக்க.

### மாணவர்மன்ற நிறைவு விழா அழைப்பிதழ்

வாழ்க தமிழ்! வெல்க தமிழ்!

அன்புடையீர்,

வணக்கம், நம் பள்ளி மாணவர் மன்றத்தின் முதலாண்டு நிறைவு விழா 11-02-2011 வெள்ளிக்கிழமை காலை 10.00 மணியளவில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படும். அவ்வேளையில், நம் பள்ளி மாணவர்கள் பங்கேற்கும் நாடகம் ஒன்று நடைபெறும். அனைவரும் தவறாது கலந்து கொண்டு விழாவினைச் சிறப்பிக்குமாறு அன்புடன் அழைக்கிறோம்.

இப்படிக்கு,
செயலர்
மாணவர் மன்றம்.

### நிகழ்ச்சி நிரல்

இடம் : ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி, புத்தேந்தல்.
நாள் : 11. 02. 2011
நேரம் : காலை 10.00 மணி
தமிழ்த்தாய் வாழ்த்து
தலைமை : திருமதி.மு.மாதவி அவர்கள், தலைமை ஆசிரியர்
முன்னிலை : திரு. இரா. சுந்தரம் அவர்கள், தமிழாசிரியர்
சிறப்புரை : திருமதி. க.வான்மதி அவர்கள், இயக்குநர், தமிழ் வளர்ச்சித் துறை
நாடகம் : 'ஊருக்கு நல்லது செய்வேன்', ஐந்தாம் வகுப்பு மாணவர்கள்
நன்றியுரை : கவின், ஐந்தாம் வகுப்பு
நாட்டுப்பண்:
நிகழ்ச்சித் தொகுப்பாளர் : முகில், ஐந்தாம் வகுப்பு.

### செயல்திட்டம்.

➤ உன் பள்ளி ஆண்டு விழாவிற்கு அழைப்பிதழ் உருவாக்குக.

துணைப்பாடம்

## வாழ்வின் வழிகாட்டி!

பாட்டி ஏதோ ஒன்றை எழுதிக் கொண்டிருப்பதைப் பேரன் பார்த்துக் கொண்டிருந்தான் "நாம் என்ன செய்தோம் என்பது பற்றிய கதை எழுதுகிறீர்களா ? அல்லது கதை என்னைப் பற்றியதா ?'' என வினவினான்.

பாட்டி எழுதுவதை நிறுத்திவிட்டுத் தன் பேரனைப் பார்த்து, "நான் உன்னைப் பற்றித் தான் எழுதுகின்றேன். எழுதப்படும் சொற்களைப் போல் அவற்றை எழுதும் பென்சிலும் மிகவும் முக்கியமானது. நீயும் பெரியவனான பின் இந்தப் பென்சிலைப் போல் இருப்பாய் என நம்புகிறேன்'' என்றார். ஆர்வமும் வியப்புமாகப் பேரன் அந்தப் பென்சிலைப் பார்த்தான். அது ஒன்றும் தனிச்சிறப்பு வாய்ந்ததாகத் தெரியவில்லை. 'இந்தப் பென்சில், நான் பார்த்த மற்ற பென்சில்கள் போலத்தானே உள்ளது' என்றான்.



நீ பார்க்கும் பார்வையினைப் பொருத்தே பொருள்களின் முக்கியத்துவம் இருக்கின்றது. பென்சிலுக்கென்று ஐந்து பண்புகள் உள்ளன. அப்பண்புகளை நீயும் உன்னுள் வளர்த்துக் கொண்டால், இவ்வுலகில் நீயும் சிறப்பாக வாழ முடியும் என்றார்.

பல திறமைகளை உடையவனாக நீ இருப்பினும் உன்னை வழி நடத்திச் செல்லப் பலர் உள்ளனர். அவர்கள் உன் தாய், தந்தை, ஆசிரியர்கள், பெரியோர்கள் மற்றும் நல்ல புத்தகங்கள். நல்ல பென்சிலும் எழுதுபவருக்கு உட்பட்டு, நினைக்கும் வழி செல்கின்றது. அதுபோல் உன்னை வழி நடத்துபவர் சொற்களைக் கேட்டு நீ நடக்க வேண்டும். இது முதல் பண்பு.

நான் பென்சிலின் கூர்மை மழுங்கும் போதெல்லாம் அதனைக் கூர்மைப் படுத்துகின்றேன். இதனால், பென்சில் துன்பத்திற்கு உட்படுகின்றது. ஆனால், அது கூர்மையாக்கப்பட்டுத் திறம்படச் செயலாற்றத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்கின்றது. அதுபோல நீயும் சில தோல்விகள், துன்பங்களைத் தாங்கிக் கொள்ளக் கற்றுக்கொண்டால் நன்கு பக்குவப்பட்டுச் சிறந்தவனாவாய். இது இரண்டாவது பண்பு.

ஏதேனும் தவறுதலாகப் பென்சிலால் எழுதிவிட்டால் அழிப்பான் கொண்டு அழிக்கின்றோம். இதற்குப் பென்சில் அனுமதிக்கின்றது. தவறைத் திருத்திக் கொள்வது ஒரு குறை அன்று. நீதி, நேர்மை சரியானதை நிலைநாட்டத் தவறுகளைத் திருத்திக் கொள்வது தேவையாகின்றது. இது மூன்றாவது பண்பு.

மரத்தாலான பல்வேறு வண்ணங்கள் பூசப்பட்ட பென்சிலின் வெளித்தோற்றத்தைவிட அதன் உள்ளே உள்ள கரிமம் (கிராபைட்) முக்கியமானது. அதுபோல் நீயும் உன் மனத்துள் என்ன நிகழ்கிறது என்பதைக் கவனிப்பதில் கருத்தினைச் செலுத்த வேண்டும். இது நான்காவது பண்பு.

பென்சில், தான் எழுதும் தாளில் தன்னுடைய சுவட்டினை முத்திரையாகப் பதித்துவிட்டுச் செல்கின்றது. அதுபோல நீயும் உன் வாழ்வில் செய்யும் ஒவ்வொரு செயலும் உன் தனித்தன்மையையும் முத்திரையையும் பதித்துப் பெயர் சொல்லும்படி இருக்க வேண்டும். ஆகவே, உன்னுடைய ஒவ்வொரு செயலினையும் கவனத்துடன் மேற்கொள்ள வேண்டும். இது ஐந்தாவது பண்பு.

இப்போது பென்சிலின் சிறப்புகளைப் புரிந்து கொண்டாயா ?

**சிந்திக்க**

- உன்னிடம் உள்ள தவறுகளைப் பிறர் சுட்டிக்காட்டும்போது அதனை நீ ஏற்றுக் கொள்வாயா ?
- எதிர்காலத்தில் நீ சிறந்து விளங்க எத்தகைய முயற்சிகளை மேற்கொள்வாய்?

செய்யுள்

# திருக்குறள்

இயல் – 3

## காலம் அறிதல்



1. ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்.

பாடல்பொருள் :

தகுந்த காலத்தையும் ஏற்ற இடத்தையும் தெரிந்து ஒரு செயலை மேற்கொண்டால் உலகத்தையே அடைய நினைத்தாலும் அடைய முடியும்.

சொல்பொருள் :

ஞாலம் – உலகம்
கருதினும் – நினைத்தாலும்
கைகூடும் – அடைய முடியும்



2. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.

பாடல்பொருள் :

ஒரு செயலைச் செய்ய ஏற்ற காலம் வரும்வரை, கொக்கைப்போல் பொறுமையாகக் காத்திருக்க வேண்டும். உரிய காலம் வந்தவுடன், கொக்கு விரைந்து மீனைக்கொத்தி எடுப்பதுபோல் செயலை விரைந்து செய்து முடிக்க வேண்டும்.

சொல்பொருள் :

கொக்கொக்க – கொக்கைப் போல்
கூம்பும் பருவம் – பொறுமையுடன் காத்திருக்கும் காலம்
குத்தொக்க – குத்துவதைப் போல
சீர்த்த இடம் – உரிய காலம்

## வினைத்திட்பம்

1. சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.

பாடல்பொருள் :

இச்செயலை இவ்வாறு செய்து முடிக்கலாம் என்று சொல்லுதல் எவர்க்கும் எளிது. ஆனால், சொல்லியபடி செய்து முடித்தல் அரிது.

சொல்பொருள் : சொல்லியவண்ணம் – சொல்லியபடி

2. உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு

அச்சாணி அன்னார் உடைத்து.

பாடல்பொருள் :

ஒருவரின் தோற்றத்தைக் கண்டு இகழக் கூடாது. ஏனெனில், உருண்டோடும் பெரிய தேரைக் காப்பது அதன் சிறிய அச்சாணியே ஆகும்.

சொல்பொருள் :



| | | |
|---|---|---|
| உருவு | – | உருவம் |
| எள்ளாமை | – | இகழ்ந்து பேசாமை |
| அன்னார் | – | போன்றவர் |

## பெருமை

1. பணியுமாம் என்றும் பெருமை சிறுமை

அணியுமாம் தன்னை வியந்து.

பாடல்பொருள் :

பெருந்தன்மையான குணம் கொண்டவன் எல்லாரிடமும் எப்பொழுதும் பணிவாக நடந்து கொள்வான். சிறுமைக் குணம் உடையவன் எப்போதும் தன்னைத் தானே பாராட்டிப் புகழ்ந்து கொள்வான்.

சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| பெருமை | – | பெருந்தன்மையான உள்ளம் |
| அணியும் | – | புகழும், பாராட்டும் |

2. பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்

அருமை உடைய செயல்

பாடல்பொருள் :

பெருமை உடையவர் பிறரால் எளிதில் செய்து முடிக்க முடியாத செயல்களை, விடாமுயற்சியுடன் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவர் ஆவர்.

சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| ஆற்றுவார் | – | செய்வார் |
| அருமை | – | எளிதில் செய்ய இயலாத அரிய செயல் |

## பயிற்சிகள்

I. அ. வகுப்பறையில் பேசுக.

1. ஒருவரின் தோற்றத்தைக் கொண்டு அவரை மதிப்பிடலாமா – ஏன் ?

### ஆ. பிரித்து எழுதுக.

1. கொக்கொக்க = ____________________
2. குத்தொக்க = ____________________
3. பெருந்தேர் = ____________________
4. மற்றதன் = ____________________

### இ. கோடிட்ட இடங்களை நிரப்புக.

1. தகுந்த ____________ செயலை மேற்கொண்டால் வெற்றி உறுதி.
2. கொக்கு மீனைப்பிடிக்க ____________ பாயும்.
3. சொல்லுதல் யார்க்கும் ____________ .
4. பெருந்தேர் ஓட ____________ வேண்டும்.

### ஈ. சொற்றொடரில் அமைத்து எழுதுக.

1. மறத்தல் : ____________________
2. சோம்பல் : ____________________
3. விருப்பம் : ____________________
4. சிறுமை : ____________________

### உ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. உலகைக் குறிக்கும் வேறு சொல்

   ( அ ) ஊர் ( ஆ ) நாடு ( இ ) ஞாலம்

2. பணியும் குணம் கொண்டது .

   ( அ ) பெருமை ( ஆ ) சிறுமை ( இ ) கயமை

### ஊ. விடை எழுதுக.

1. ஞாலம் கருதினும் கைகூடும். எப்போது ?
2. ஒருவரின் உருவத்தைக் கண்டு இகழக்கூடாது. ஏன் ?
3. பெருமைக் குணம் – சிறுமைக் குணம் உடையவர்களை வேறுபடுத்துக.
4. பெருமைக் குணம் உடையவர்கள் எத்தகைய செயல்களைச் செய்யும் ஆற்றல் உடையவர்கள் ?

### II. அ. தொடர்களைப் படிக்க. தொடர்ந்து சில வரிகள் எழுதுக.

1. மரம் வளர்த்தால்
   மழை பொழியும்
   மழை பொழிந்தால்

   ____________________

   ____________________

   ____________________



உரைநடை

# நெஞ்சை அள்ளும் தஞ்சைப் பெரிய கோயில்

(கடிதம்)

58 , கலைமகள் நகர்,
தஞ்சாவூர்,
01.10.2010.

அன்புத்தோழி அமுதா!

நலம். நலமறிய ஆவல். நாங்கள் காலாண்டு விடுமுறையில் தஞ்சாவூரில் உள்ள அத்தை வீட்டிற்குப் பேருந்தில் புறப்பட்டோம். தமிழகத்தின் நெற்களஞ்சியமாம் காவிரி பாயும் தஞ்சைத் தரணியில் பார்க்கும் இடமெல்லாம் வயல்கள்; பச்சைப்பசேல் எனத் தலையசைத்து ஆடும் நெற்பயிர்கள்; நெற்கதிர்களைக் கொத்தித் தின்ன கூடும் குருவிக்கூட்டங்கள்; ஆங்காங்கே நீர் நிலைகளில் பூத்துக்குலுங்கும் தாமரை, அல்லி மலர்கள். அவை மனத்திற்கு மகிழ்ச்சியைத் தந்தன. மாமாவும் அத்தையும் பேருந்து நிலையத்தில் எங்களை வரவேற்று வீட்டிற்கு அழைத்துச் சென்றனர்.




அவர்கள், மறு நாள் எங்களைத் தஞ்சைப் பெரியகோயிலுக்கு அழைத்துச் சென்றார்கள். கோயிலைத் தொலைவில் இருந்து பார்த்தபோதே மனத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டது. “இக்கோயில் இராசராச சோழனால் கட்டப்பட்டது; நாம் காண்பது கேரளாந்தகன் திருவாயில்” என்று மாமா கூறினார்.அங்கு ஒரே கல்லால் ஆன மிகப் பெரிய உயரமான இரு தூண்கள் இருப்பது மிகவும் அருமை.

வாயிலின்மேல் ஐந்துநிலைகள் கொண்ட கருங்கல் கோபுரம் செம்மாந்து காட்சியளிக்கிறது. இதுதான் தமிழகத்தில் எழுப்பப்பட்ட உயரமான முதற்கோபுரமாம். கோபுரத்தில் தெய்வச்சிற்பங்கள், விலங்குகள் அனைத்தும் உயிருள்ளவை போன்று காட்சியளிக்கின்றன.

அடுத்த வாயில் 'இராசராசன் திருவாயில்' என்றார் மாமா. அது மூன்று நிலை கொண்ட கருங்கல் கோபுரம். அந்நுழைவாயிலின் இருபக்கமும் மிகப்பெரிய எழில்மிகு துவார பாலகர் சிற்பங்கள். அவற்றுள் இடப்பக்கம் உள்ள சிற்பம் கற்பனையின் சிகரம் எனலாம். ஆம், அந்தத் துவாரபாலகரின் வலதுகால், கதை எனும் ஆயுதத்தின்மேல் அழுந்தி உள்ளது.

பெரிய பாம்பு, ஒன்று யானையை விழுங்குவது போன்ற சிற்பம். பெரிய யானையை விழுங்கும் பாம்பு எவ்வளவு பெரியதாக இருக்க வேண்டும்.அப்பாம்பை மிதிக்கும் துவாரபாலகர் எவ்வளவு பலம் வாய்ந்தவராக இருக்க வேண்டும். அத் துவாரபாலகர் வணங்கும் இறைவன் எவ்வளவு பெரியவராக, ஆற்றல் மிக்கவராக இருத்தல் வேண்டும். நினைத்துப் பார்த்தேன், வியப்பாக இருந்தது.





துவாரபாலகர்

கோபுரத்தில் அமைந்துள்ள சிற்பங்கள் உண்மை உருவாய்க் காட்சி தருகின்றன. காட்சிக்கும் கருத்துக்கும் சிறப்பளிக்கும் வகையில் அனைத்துச் சிற்பங்களையும் அமைத்துள்ளார் மன்னர் இராசராசன். அவை புராணக்கதைகளை நேரில் கூறுவதுபோல அருமையாக காட்சி அளிக்கின்றன.



ஒரே கல்லால் ஆன மிகப்பெரிய நந்தியைக் கண்டேன். விந்தையிலும் விந்தை! அதனருகே நான் நின்றபோது எனது உயரம் மிகவும் குட்டையாக இருப்பதாக உணர்ந்தேன்.



காலடியில் உள்ள பாம்பு யானையை விழுங்குதல்

அதனை அடுத்துள்ள இடம் இறைவன் இருக்கும் கருவறை. அதன் மேல் திருவிமானம் எனும் கோபுரம் அமைந்துள்ளது. கோபுரத்தின் உச்சியில் மிகப்பெரிய உருண்டை வடிவக்கல் . அந்தக்கல் எண்பத்தொரு 'டன்' எடை கொண்டது என்று மாமா கூறினார்.

அக்காலத்தில் இவ்வளவு பெரிய கல்லை அவ்வளவு உயரத்திற்கு எப்படிக் கொண்டு சென்றார்கள்! நினைத்துப்பார்த்தேன், வியப்படைந்தேன்.

“கோயிலில் உள்ள அழகான ஓவியங்கள் அனைத்தும் இலைகள், பூக்களைக் கொண்டு செய்த இயற்கை வண்ணங்களால் தீட்டப்பட்டதாகும்” என்றார் ஒருவர். அர்த்த மண்டபத்தின் உள்ளே இராசராசன் சிற்பம். அவரைச் சுற்றிலும் நடன நங்கைகள் அழகுற ஆடுவது போன்ற சிற்பங்கள் நாட்டியக்கலைக்கு இராசராசன் தந்த முதன்மைச் சிறப்பினை இதன்வழி அறிந்தேன்.



கோயிலின் பக்கவாட்டுச் சுவரில் நாட்டியக்கலையை விளக்கும் பலவகைச் சிற்பங்கள்! இவை அனைத்தையும் பார்த்து வியப்படைந்தேன். நான் மட்டுமல்லாமல் அங்கிருந்த எண்ணற்ற வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளும்தாம்.

சோழர் கால ஓவியம் – சனகாதி முனிவர்கள் 



மாமா, "இக்கோயிலைக் கட்டி ஆயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன" என்றார். அப்படியா ! தமிழர்களின் கலைத்திறனையும் கட்டடக் கலையையும் எண்ணியெண்ணி வியந்தேன்.

எனக்குக் கோயிலை விட்டுவர மனமே இல்லை. மீண்டும் மீண்டும் பார்த்தேன். ஆயிரம் ஆண்டுகளைக் கடந்து நிமிர்ந்து நிற்கும் தஞ்சைப் பெரிய கோயிலைக் காண எனக்குப் பெருமையாக இருந்தது. இக்கோயிலைப் பற்றிய மேலும் பல செய்திகளை நேரில் வந்து கூறுகிறேன்.

இப்படிக்கு
உன் அன்புத் தோழி,
த. தமிழ்ச்செல்வி

உறைமேல் முகவரி

அ. அமுத யாழினி,
த/பெ. அருண்மொழி,
115, பெரிய கடைவீதி,
நீலாம்பூர்,
கோவை – 641062

தஞ்சை மாவட்டத்தில் மலைகளோ பாறைகளோ இல்லை. ஆகையால் புதுக்கோட்டை மாவட்டம், குன்றாண்டார்கோயில், நார்த்தாமலை முதலிய இடங்களில் இருந்து கற்களும் பாறைகளும் கொண்டுவரப்பட்டுத் தஞ்சைப் பெரியகோயில் கட்டப்பட்டுள்ளது.

ஐக்கிய நாடுகள் கல்வி அறிவியல் பண்பாட்டு நிறுவனம், 1987ஆம் ஆண்டு தஞ்சைப் பெரிய கோயிலை 'உலகப் பாரம்பரியச் சின்னமாக' அறிவித்துள்ளது.

கி.பி. 1010ஆம் ஆண்டு தஞ்சைப் பெரிய கோயிலுக்குக் குடமுழுக்கு நடைபெற்றது. 2010 ஆம் ஆண்டில் ஆயிரம் ஆண்டுகள் நிறைவடைகிறது.

தமிழக அரசின் சார்பாகக் கொண்டாடப்பட்ட தஞ்சைப் பெரியகோயில் 1000–ஆண்டு நிறைவு விழா நிகழ்ச்சிகள் –22.09.2010 முதல் 26.09.2010 வரை – ஒரு தொகுப்பு.









விழாவில் வெளியிடப்பட்ட சிறப்பு அஞ்சல் தலை , சிறப்பு நாணயம் .



களிமேடு கிராமத்தினர் வழங்கிய திருமுறை ஓதுதல்.



விழாவில் இடம் பெற்ற கும்மி நடனம்.



விழா மேடையில் இடம் பெற்றிருந்த மாமன்னன் இராஜராஜன் சிலை.



முனைவர் பத்மா சுப்ரமணியம் குழுவினரது நடனம்.

## சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| களஞ்சியம் | – | தானியம் சேர்த்து வைக்கும் இடம் |
| அகழி | – | கோட்டையைச் சுற்றியுள்ள நீர் நிறைந்த பகுதி |
| தரணி | – | உலகம் |
| டன் | – | ஆயிரம் கிலோ கிராம் |

## பயிற்சிகள்

### I. அ. வகுப்பறையில் எழுதுக.

1. உன் மனம் கவர்ந்த இடம் அல்லது விரும்பும் பொருளைப் பற்றி உன் தோழிக்கு / தோழனுக்குக் கடிதம் எழுதுக.
2. உன் ஊர்த் திருவிழாவிற்கு அழைப்பு விடுத்து உறவினர்க்குக் கடிதம் எழுதுக.
3. பாட நூலில் இடம்பெற்றுள்ள கடிதத்திற்கு மறு மடல் எழுதுக.

### ஆ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.



1. கோயிலைக் குறிக்கும் வேறு சொல்

   ( அ ) இல்லம் ( ஆ ) ஆலயம் ( இ ) சத்திரம்
2. நாட்டியத்தைக் குறிக்கும் வேறு சொல்.

   ( அ ) நாடகம் ( ஆ ) நடனம் ( இ ) பாடல்
3. ஓவியத்தைக் குறிக்கும் வேறு சொல்.

   ( அ ) வண்ணம் ( ஆ ) சிற்பம் ( இ ) சித்திரம்
4. அகழி என்பது இதனால் நிரப்பப்பட்டிருக்கும்.

   ( அ ) கற்கள் ( ஆ ) மண் ( இ ) நீர்

### இ. விடை எழுதுக.

1. தஞ்சைக் கோயிலில் உள்ள நந்திச்சிலை பற்றி எழுதுக.
2. இராசராசன் வாயிலின் சிறப்பு யாது ?
3. கோயிலில் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ள உருவங்கள் எவை ?
4. தஞ்சைக் கோயிலின் அமைப்புப் பற்றி எழுதுக.

## II. அ. இணைச் சொற்களை அறிக.

1. என் தாய் என்னைச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தார்.
2. அமலநாதன் நன்றாகப் படித்துப் பேரும் புகழும் பெற்றான்.
3. மூங்கில் மரங்கள் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருந்தன.

வண்ண எழுத்தில் உள்ள சொற்கள் இரண்டும் ஒரே பொருளைத் தந்து கருத்தை வலுப்படுத்துகின்றன. இதனை நேரிணை என்கிறோம்.

1. குழந்தை இங்கும் அங்கும் ஓடி விளையாடியது.
2. நண்பர்களின் இன்ப துன்பங்களில் நாம் பங்கெடுக்க வேண்டும்.
3. நாம் அனைவரிடமும் விருப்பு வெறுப்பு இன்றி நடந்துகொள்ள வேண்டும்.

வண்ண எழுத்தில் உள்ள சொற்கள் எதிர்ச்சொற்களாக அமைந்து கருத்துக்கு வலுச்சேர்க்கின்றன. எனவே, இதனை எதிரிணை என்கிறோம்.

வண்ண எழுத்தில் உள்ள சொற்கள் வண்ணத்தின் செறிவினை (அடர்த்தியை) வலுப்படுத்துகின்றன. இதனைச் செறியிணை என்கிறோம்.

இணைச்சொற்கள் – நேரிணை, எதிரிணை, செறியிணை என மூன்று வகைப்படும்

1. தஞ்சையில் நெல்வயல்கள் பச்சைப் பசேல் என்று காணப்படுகின்றன.
2. கிளியின் மூக்குச் செக்கச் செவேல் என்று இருக்கும்.
3. முயல் வெள்ளை வெளேரென்று இருந்தது.

## ஆ. பின்வரும் சொற்களைப் பொருத்தமான கட்டத்தில் எடுத்து எழுதுக.

கன்னங்கரேல், கண்ணும் கருத்துமாக, இன்ப துன்பம், சீரும் சிறப்பும், வெற்றி தோல்வி, ஒப்பாரும் மிக்காரும், அன்றும் இன்றும், தன்னந்தனியாக.

| நேரிணை | எதிரிணை | செறியிணை |
|---|---|---|
| | | |

# இந்நாள் இனிய நன்னாள்

## (நாள்குறிப்பு)

04 – சூன் – 2010 – வெள்ளி.

இன்று காலையில் நண்பனுடன் பள்ளிக்குச் சென்று கொண்டிருந்தேன். வழியில் மூன்றாம் வகுப்பில் படிக்கும் கந்தன் அழுதபடி நின்று கொண்டிருந்தான்.

நாங்கள் அவனைப் பார்த்து, "கந்தா. . . ஏன் அழுகிறாய் ?" என்று கேட்டோம். பென்சில் வாங்குவதற்காக அப்பா கொடுத்த ஐந்துரூபாய்க் காசைக் காணவில்லை", என்று கூறி மீண்டும் அழத்தொடங்கினான்.

"ஐந்துரூபாயை எங்கே வைத்தாய்", என்று கேட்டேன். அதற்குக் கந்தன், "எனது சட்டைப் பையில்தான் வைத்தேன்" என்றான். நான் அவன் சட்டைப் பையைப் பார்த்தேன். பையில் சிறிய ஓட்டை இருந்தது. அந்த ஓட்டை வழியாகத்தான் காசு விழுந்திருக்கும் என்று முடிவு செய்தேன். எப்படியாவது கந்தனின் அழுகையைப் போக்க நினைத்தேன். நண்பர்கள் சேர்ந்து, வீட்டில் எங்களுக்குக் கொடுத்த காசுகளைத் திரட்டினோம். அவ்வாறு திரட்டிய காசின் மூலம் அவனுக்குப் பென்சில் வாங்கித்தர முடிவு செய்தோம்.



அந்த நேரத்தில் நான்காம் வகுப்பில் படிக்கும் முத்து அங்கு வந்தான். பள்ளிக்கு வரும் வழியில் ஐந்துரூபாய்க்காசு ஒன்று கிடைத்ததாகச் சொன்னான். "அப்படியா! அந்தக் காசு கந்தனுக்கு அவன் தந்தை 'பென்சில்' வாங்குவதற்குக் கொடுத்தது" என்று கூறினோம்.உடனே, முத்து அந்த ஐந்துரூபாயைக் கந்தனிடம் கொடுத்தான். முத்துவுக்கு நன்றி கூறினோம்.

கந்தனுக்கு நல்ல பென்சில் ஒன்றை வாங்கிக் கொடுத்தோம். கந்தனின் அழுகை நின்றது; முகத்தில் மலர்ச்சி தோன்றியது. முத்துவின் நேர்மையான உள்ளம் எங்களை மிகவும் கவர்ந்தது. உதவி தேவைப்படும்பொழுது தானாகவே முன்வந்து உதவும் நண்பர்கள் பலரைப் பெற்றிருக்கின்றேன் என்னும் உணர்வு என்னை மிகவும் நெகிழச் செய்தது. இந்த நட்பு என்றென்றும் தொடர வேண்டுமென விரும்புகின்றேன்.

இந்நாள் என்வாழ்வில் மறக்க முடியாத இனிய நன்னாளாகும்.

இனியன் . . . . .

## பயிற்சிகள்

### I. அ. வகுப்பறையில் எழுதுக.

உன் வாழ்வில் நிகழ்ந்த இனிமையான ஒரு செய்தியைப் பற்றி எழுதுக.

நீ, இதுநாள் வரை நாள் குறிப்பு எழுதி உள்ளாயா ? இன்று முதல் நாள்குறிப்பு எழுதிப்பார்.... தொடர்ந்து எழுதிப் பழகுக.

### ஆ. கீழுள்ளவர்கள் போல் நடித்துக் காட்டுக.

ஒட்டுநர், நடத்துநர், மருத்துவர், ஆசிரியர், பூ விற்பவர், காய் விற்பவர்.

### இ. பத்தியைப் படித்து, தேவையான இடங்களில் பொருத்தமான நிறுத்தற் குறிகளை இடுக.

முத்து இன்று ஏன் பள்ளிக்கு வரவில்லை ஊருக்குச் சென்றிருப்பானோ உடல் நலமில்லையோ அவன் எவ்வளவு நல்லவன் நாளையாவது வருவானா ஓயாமல் ஒலித்தது பேருந்தின் ஒலிப்பான் என்ன நடந்தது பின்னால் திரும்பிப் பார்த்தேன் பேருந்து சிற்றுந்து மகிழுந்து என அனைத்தும் நீண்ட வரிசையில் நின்றன ஏனெனில் மாடுகள் பல சாலையின் நடுவில் படுத்திருந்தன.

### ஊ. படத்தைப் பார், பாடல் எழுதுக.

பார் பார் தொட்டியைப் பார்

தொட்டியின் மேலே செடியைப் பார்

செடியின் மேலே ________________

________________________

________________________



### செயல் திட்டம்.

- உன் ஊரில் உள்ள வழிபாட்டுத் தலங்களின் சிறப்புகளைத் தொகுத்து எழுதுக.
- உன் ஊரில் வழங்கும் விளையாட்டுப் பாடல்களைத் திரட்டி வருக.
  (எ.கா.) குலை குலையாய் முந்திரிக்காய்...
- சிறுவர் இதழ்களில் வரும் அறநெறிக் கதைகளைத் தொகுத்து ஒரு கதைத் தொகுப்பு உருவாக்குக.

துணைப்பாடம்

# மூன்று பொற்காசுகள்

நாகப்பன் பெருஞ்செல்வந்தர். அவர் தன்னிடம் வேலையில் சேர்பவர்களுக்கு ஆண்டு முடிவில் மூன்று பொற்காசுகள் ஊதியமாக வழங்குவார். அதற்குமுன் அறிவைச் சோதிப்பதற்கு மூன்று செயல்களைக் கொடுப்பார். அவற்றைச் சரியாகச் செய்து முடிக்க வேண்டும். இல்லையெனில் ஒவ்வொரு செயலுக்கும் ஊதியத்திலிருந்து ஒரு பொற்காசைக் குறைத்துக் கொள்வார்.

இந்நிபந்தனைகளை ஒப்புக்கொள்பவரையே வேலையில் சேர்த்துக்கொள்வார். நாகப்பனிடம் வேலையில் சேர்ந்த எவரும் இது வரை ஊதியம் பெற்றதில்லை. ஏனெனில், ஆண்டு முடிவில் அவர் தரும் செயல்களைச் செய்ய முடியாமல் தோல்வியடைந்து வெறுங்கையுடன்தான் சென்றுள்ளனர். இவ்வாறாக நாகப்பன் வேலையாள்களுக்கு ஊதியம் தராமல் ஏமாற்றி வந்தார்.

நாகப்பனின் ஏமாற்றுத்தனத்தை அறிந்த அறிவுநம்பி அவருக்குச் சரியான பாடம் புகட்ட எண்ணினான். நாகப்பனின் நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு வேலையில் சேர்ந்தான். ஓராண்டு முடிவில் ஐயா, 'நான் பணியில் சேர்ந்து இன்றோடு ஓராண்டு நிறைவடைகிறது ஊதியம் வேண்டும்' என்றான். "அப்படியா! நிபந்தனைகள் நினைவிருக்கிறதல்லவா ?" என்று கேட்டார் நாகப்பன்.

அறிவுநம்பி, 'ஐயா, நன்றாக நினைவிருக்கிறது' என்றான். 'இவ்வூரில் எத்தனை காகங்கள் இருக்கின்றன ? எண்ணிச்சொல். இதுதான் முதல் வேலை', என்றார் நாகப்பன். ஆயிரத்துப்பத்து' என்றான் அறிவுநம்பி. உடனடி பதிலைக் கேட்ட நாகப்பன் சற்றே அதிர்ச்சியடைந்தார். "அது எப்படி"? என்றார். அறிவுநம்பி சற்றும் தயங்காமல் "ஐயமிருந்தால் காகங்களை எண்ணிப்பாருங்கள். எனச் சிரித்துக் கொண்டே சொன்னான்"."ஆயிரத்துப்பத்துக் காகங்களை விட அதிகமாக இருந்தால் என்ன செய்வது"?





“அதிகமாக இருந்தால் அவை வெளியூரில் இருந்து வந்தவையாக இருக்கும்” என்றான் அறிவுநம்பி. “எண்ணிக்கை குறைவாக இருந்தால்” என்று நாகப்பன் கேட்டவுடன், “இங்குள்ளவை வெளியூருக்குச் சென்றிருக்கும்” என்று கூறிக் கலகலவெனச் சிரித்தான் அறிவுநம்பி.

“அப்படியா! அடுத்தவேலை இந்த அறைக்குள் இருக்கும் நெல்லை வெளியில் எடுத்துச் செல்லாமல் காயவைக்க வேண்டும்” என்றார். “இதோ ஒரு நொடியில் முடிக்கிறேன்” என்று கூறி, அறிவுநம்பி மடமடவென வீட்டின் கூரை மேல் ஏறினான். கூரைகளைப் பிரித்தான், கதிரவன் வெப்பம் வீட்டிற்குள் இருந்த நெல்லின் மீது விழுந்தது. “ஐயோ! கூரை.. கூரை.. பதறினார்” செல்வந்தர். “ஐயா, நீங்கள் கூறியபடியே அறைக்குள்ளேயே நெல்லைக் காய வைத்துள்ளேன்” என்றான் அறிவுநம்பி. நாகப்பன் பற்களை நறநறவெனக் கடித்தார்.



மூன்றாவது செயலை இவனால் செய்யவே முடியாது என முடிவு செய்தார். அறிவுநம்பியைப்பார்த்து “என் தலையின் எடை என்ன ? சரியாகக் கூறு” என்றார். அறிவுநம்பி சற்று யோசித்தான் செல்வந்தரின் தலையை உற்று நோக்கினான், வேகமாகத் தோட்டத்திற்குச் சென்றான். பூசணிக்காய் ஒன்றைப் பறித்து வந்தான். “ஐயா, உங்கள் தலையின் எடையும் இப்பூசணிக்காயின் எடையும் ஒன்றுதான்” என்றான். “அது எப்படி ஒன்றாகும்” என்றார் நாகப்பன். “இதோ! தராசு இருக்கிறது. ஒரு தட்டில் பூசணிக்காயை வைக்கிறேன். ஐயம் இருந்தால் சரிபார்த்துக்கொள்ளுங்கள்” என்றான். நாகப்பன் தன் தலையை நினைத்துப்பார்த்தார். தன் தவற்றை உணர்ந்தார்.

“இனிமேல் யாரையும் ஏமாற்ற மாட்டேன்” எனக்கூறி அறிவுநம்பிக்கு மூன்று பொற்காசுகளைக் கொடுத்தார்.

**சிந்திக்க**

- நாகப்பனின் ஏமாற்றுத்தனத்தைப் பற்றிய உன் கருத்தைக் கூறுக.
- அறிவுநம்பியின் செயல்கள் சரியென்று கருதுகிறாயா ?

செய்யுள் | நீதிநெறி விளக்கம் | இயல் – 4

## நீதிநெறி விளக்கம்

1. முற்றும் உணர்ந்தவர் இல்லை, முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க – சிற்றுளியால்
கல்லும் தகரும் தகரா கனங்குழாய்!
கொல்லுலைக் கூடத்தி னால்.

**பாடல்பொருள் :**

பொன்னாலான காதணிகளை அணிந்த பெண்ணே! உலகில் முழுமையாகக் கற்று உணர்ந்தவர் எவரும் இல்லை. ஆகையால், அனைத்தையும் கற்றுத் தேர்ந்துவிட்டோம் என்று ஒருவன் செருக்குக் கொள்ளக்கூடாது. ஏனெனில், கொல்லன் உலைச் சம்மட்டியால் உடைபடாத பெரிய மலையைச் சிறிய உளியும் தகர்த்துவிடும்.

**சொல்பொருள் :**

முற்றும் உணர்ந்தவர்கள் – முழுமையாகக் கற்று உணர்ந்தவர்கள்
கற்றனம் – கற்றுவிட்டோம்
களியற்க – செருக்குக் கொள்ளக்கூடாது
கனங்குழாய் – பொன்னாலான காதணிகளை அணிந்த பெண்ணே
தகரும் – உடைபடும்
கொல்லுலை – கொல்லன் உலை

2. வாங்கும் கவளத்து ஒருசிறிது வாய் தப்பின்
தூங்கும் களிறோ துயர்உறா – ஆங்கதுகொண்டு
ஊரும் எறும்புஇங்கு ஒருகோடி உய்யுமால்
ஆரும் கிளையோடு அயின்று.

**பாடல்பொருள் :**

அசைந்து கொண்டிருக்கும் யானைகள், தாம் உண்ணும் உணவில் ஒரு சிறிது வாயினின்று தவறி விழுந்துவிட்டால் அதற்காக வருந்துவதில்லை. அவ்வாறு சிந்திய உணவை அங்கு ஊர்ந்து செல்லும் ஒரு கோடி எறும்புகள் தம் சுற்றத்தோடு உண்டு வாழும். ஒருவர் தம்மிடம் உள்ள செல்வத்தின் சிறு பகுதியைப் பிறர் பயன்படும் படி செலவு செய்வதனால் பலர் பயன் பெறுவர்.

**சொல்பொருள் :**



| | | |
|---|---|---|
| கவளம் | – | சோற்று உருண்டை |
| தூங்கும் | – | அசைந்து கொண்டிருக்கும் |
| களிறு | – | ஆண் யானை |
| துயர்உறா | – | வருத்தம் அடைவதில்லை |
| உய்யும் | – | பிழைக்கும், வாழும் |
| ஆரும் | – | நிறைவுபெறும் |
| கிளையோடு | – | சுற்றத்தாரோடு |
| அயின்று | – | உணவாக உண்டு |

**3. மெய்வருத்தம் பாரார்; பசிநோக்கார்; கண்துஞ்சார்;**
**எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்;– செவ்வி**
**அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார்;**
**கருமமே கண்ணாயி னார்.**

**பாடல்பொருள் :**

தாம் மேற்கொண்ட செயலில் கண்ணும் கருத்துமாக இருப்பவர்கள், உடல் வருத்தம், பசி, உறக்கம், பிறர்செய்யும் தீமைகள், காலத்தின் அருமை, பிறரால் ஏற்படும் இழுக்குகள் ஆகியவற்றைப் பொருட்படுத்த மாட்டார்கள்.

**சொல்பொருள் :**

| | | |
|---|---|---|
| மெய் | – | உடல் |
| செவ்வி | – | காலம் |
| துஞ்சார் | – | உறங்கமாட்டார் |

**ஆசிரியர் குறிப்பு:**



குமரகுருபரர்

| | | |
|---|---|---|
| பெயர் | – | குமரகுருபரர் |
| ஊர் | – | தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள திருவைகுண்டம் |
| பெற்றோர் | – | சண்முக சிகாமணிக் கவிராயர், சிவகாம சுந்தரி |
| சிறப்பு | – | இளமையிலேயே கவிபாடும் ஆற்றல் பெற்றவர் |
| காலம் | – | 17 ஆம் நூற்றாண்டு |

## பயிற்சிகள்

### அ. வகுப்பறையில் பேசுக.

1. கல்விச் செல்வம், பொருட்செல்வம் இவற்றுள் நீ எந்தச்செல்வத்தை உயர்வாக எண்ணுகிறாய் ? சிறு குழுவில் உரையாடுக.

### ஆ.பிரித்து எழுதுக.

1. சிற்றுளி = ______________________
2. கொல்லுலை = ______________________
3. ஆங்கது = ______________________
4. கண்ணாயினார் = ______________________
5. நல்வழி = ______________________

### இ. எதிர்ச்சொல் எழுதுக.

1. குறை x ______________________
2. தகரும் x ______________________
3. நல்வழி x ______________________
4. விழிப்பு x ______________________
5. கவலை x ______________________

### ஈ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. உறக்கம் என்பதைக் குறிக்கும் சொல்

   ( அ ) விழிப்பு ( ஆ ) துயில் ( இ ) எழுதல்

2. குழை என்பதன் பொருள்

   ( அ ) செவி ( ஆ ) காதணி ( இ ) அணிகலன்

3. கவளம் என்பதன் பொருள்

   ( அ )உணவு உருண்டை ( ஆ ) சோறு ( இ ) இலை, தழை

### உ. விடை எழுதுக.

1. முழுவதும் கற்றுவிட்டோம் என்று செருக்கடையக் கூடாது. ஏன் ?
2. ஒரு செயலில் ஈடுபடுபவர் எவற்றைப் பொருட்படுத்த மாட்டார் ?
3. யானை உண்ணும்போது சிந்தும் உணவு எதற்குப் பயன்படுகிறது ?

உரைநடை

## கலை உலகில் கலைவாணர்



அன்று, நாடகம் முடிந்ததும் மக்கள் கூட்டம், மேடையை நோக்கி ஓடியது. நாடகத்தில் மிகச் சிறப்பாக நடித்திருந்த சிறுவனுக்குப் பாராட்டுகள் குவிந்தன. விழாவிற்குத் தலைமையேற்ற சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் "இச்சிறுவன் வருங்காலத்தில் மாபெரும் மேதையாக விளங்கப்போகிறான்; இவனால் தமிழ்நாடே பெருமையடையப் போகிறது" என்று பாராட்டிப் பேசினார். இந்த அளவிற்கு அனைவரின் கவனத்தையும் ஈர்த்த அச்சிறுவன் யார் ?

நாஞ்சில் நாடு என்று அழைக்கப்படும் குமரி மாவட்டம் எண்ணற்ற கலைஞர்களையும் செந்தமிழ் அறிஞர்களையும் நல்கியது. இம்மாவட்டத்திலுள்ள ஒழுகினசேரியில் 1908ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 29ஆம் நாள் சுடலைமுத்து– இசக்கியம்மாளுக்கு மகனாகப் பிறந்த அச்சிறுவனே பார்போற்றும் கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன்.

இளம் வயதிலேயே கல்வியை இழந்த அவர், குடும்பத்திற்கு உதவிட, நாடக அரங்குகளில் குளிர்பானங்கள் விற்றார். இவரது நல்ல குரல் வளமும், பாடும் திறனும், நகைச்சுவைப் பேச்சும் நாடகத்தில் நடிக்கும் வாய்ப்பைப் பெற்றுத் தந்தன. சிரிப்பு நடிகராக மட்டுமல்லாமல் சிந்தனைக்குரிய செய்திகளைச் சொல்பவராகவும் விளங்கினார். இவருடைய நகைச்சுவைப் பேச்சு படித்தவர் மட்டுமல்லாது பாமரரும் மகிழ்ந்து போற்றும் வண்ணம் இருந்தது.

இவர் பாடுவார், ஆடுவார், எழுதுவார், இயக்குவார், உரையாற்றுவார், நடிப்பார், நடிக்கவும் வைப்பார், சிரிக்கச் சிரிக்கப்பேசி மக்களைச் சிந்திக்கவும் வைப்பார். பிறர்மனத்தைப் புண்படுத்தாமல் பண்படுத்தும் நகைச்சுவையைக் கையாளுவதில் சிறந்து விளங்கினார்.

என்.எஸ். கிருஷ்ணன் எழுத்தாளர் மாநாடு ஒன்றில் ஒரு முறை பேசினார். அங்குக் கூடியிருந்தவர்களைப் பார்த்துத் "தற்போதைய எழுத்தாளர்கள் எழுதுகோலில் எப்படிப்பட்ட மையைத் தொட்டு எழுதுகிறார்கள் தெரியுமா ? சிலர் பெருமை தொட்டு எழுதுகின்றனர். பலர் தற்பெருமையில் தொட்டு எழுதுகின்றனர். வேறு சிலர் பொறாமையில் தொட்டு எழுதுகின்றனர். மற்றும் சிலர் பழைமையில் தொட்டு எழுதுகின்றனர்.

இதையெல்லாம்கூட ஏற்றுக்கொள்ளலாம். ஆனால், யாருமே தொடவே கூடாத, தீமை தரக்கூடிய சில ‘‘மை’’கள் உள்ளன. அவை என்னென்ன தெரியுமா ?” என்று கேட்டார். கூட்டத்தினர் பதில் தெரியாமல், என்ன சொல்லப்போகிறார் என்ற ஆர்வத்துடன் உன்னிப்பாகக் கவனித்தனர் . ‘‘கயமை, பொய்மை, மடமை, வேற்றுமை ஆகியவைதாம் அவை’’ என்றார். அனைவரும் கையொலி எழுப்பி மகிழ்ச்சியைத் தெரிவித்தனர் .

எழுத்தாளர்கள் சமுதாயக் கடமையாகத் தொட்டு எழுத வேண்டிய ‘‘மை’’கள் என்னென்ன என்று அவையோரைப் பார்த்துக் கேட்டார். அவையோர் விழிக்க , அவரே விடை கூறினார். ‘‘நன்மை தரக்கூடிய நேர்மை, புதுமை, செம்மை, உண்மை’’ என்றார். அரங்கம் முழுவதும் கையொலி அடங்க வெகு நேரமாகியது . மேலும் அவர் ‘‘மக்கள் மனத்திலிருந்து நீக்க வேண்டிய "மைகள்" வறுமை, ஏழ்மை, மடமை, கல்லாமை, அறியாமை’’ என்று சொன்னபோது அவையோர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. ‘மை’ என்ற சொல்லைக் கொண்டு என்.எஸ்.கிருஷ்ணன் ஆற்றிய செந்தமிழ்ச்சொல் விளையாடல் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது.

"வாய்விட்டுச் சிரித்தால் நோய் விட்டுப் போகும்", ‘‘சிரிக்கத் தெரிந்தவன் மனிதன் மட்டுமே! சிரித்து வாழ வேண்டும்’’ என்று கூறும் அவர், திரைப்படத்தில் சிரிப்பின் சிறப்பை விளக்கி...

சிரிப்பு ... இதன்
சிறப்பைச் சீர்தூக்கிப் பார்ப்பதே நமது பொறுப்பு.
சிந்திக்கத் தெரிந்த மனித இனத்திற்கே
சொந்தமான கையிருப்பு
எந்த ஜீவராசியும் செய்ய முடியாத
செயலாகும் இந்தச் சிரிப்பு
மனம் கருப்பா வெளுப்பா என்பதை எடுத்துக்
காட்டும் கண்ணாடிச் சிரிப்பு ...
களைப்பை நீக்கிக் கவலையைப் போக்கி
மூளைக்குத் தரும் சுறுசுறுப்பு ...



எனப் பாடல் பாடிச் சிந்தனையைத் தூண்டுகிறார். இவரது நகைச்சுவை உணர்வைப் பாராட்டி முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் 'நகைச்சுவை அரசு' என்னும் பட்டத்தை வழங்கினார். நாடகப் பேராசிரியர் பம்மல் சம்பந்த முதலியார் தலைமையில் நடராஜா கல்விக்கழகம் ஏற்பாடு செய்த விழாவில் 'கலைவாணர்' என்னும் பட்டம் இவருக்கு வழங்கப்பட்டது. இவர் தனக்குத்தானே 'நாகரிகக் கோமாளி ' என்ற பட்டத்தையும் சூட்டிக் கொண்டார்.

எதிர்காலத்தில் உலகில் அறிவியல் வளர்ச்சி எப்படியிருக்கும் என்பதை அக்காலத்திலேயே திரைப்படங்களில்,

விஞ்ஞானத்தை வளர்க்கப் போறேண்டி – மேனாட்டாரை
விருந்துக்கழைச்சுக் காட்டப் போறேண்டி

........................................................

நெல்லுக் குத்த மாவரைக்க
நீரிறைக்க மிசினு
அல்லும் பகலும் ஆக்கி அரைக்க
அதுக்கொரு மிசினு....

என்று பாடியுள்ளார்.



ஆம் , இன்று நாம் பயன்படுத்தும் மின் அரைவை இயந்திரங்களைப் பற்றி அன்றே கூறியிருப்பது வியப்பிலும் வியப்பு.

நகைச்சுவைச் சிந்தனை உணர்வுக்கு, அப்பாற்பட்டுத் துன்பப்படுவோருக்கு உதவும் அரிய பண்பு அவரிடம் இருந்தது. ஒரு முறை துணை நடிகர் ஒருவர் உடனே ஊர் திரும்ப வேண்டியிருந்தது . பணம் இல்லாததால் வருத்தத்துடன் இருந்தார். இதனை அறிந்த கலைவாணர் துணை நடிகரை அழைத்தார். "என் பெட்டியில் பணம் இருக்கிறது , எடுத்துக்கொண்டு ஊர் போய்ச்சேர்" என்றார். நன்றி கூறிச் சென்ற துணை நடிகர் மீண்டும் திரும்பி வந்தார்.

"ஐயா! பணத்தை எடுத்துக் கொள்ளச் சொன்னீர்கள், ஆனால், பெட்டிச் சாவியைத் தரவில்லையே ?" என்று கேட்டார். கலைவாணர் சிரித்தார். "பெட்டிச்சாவியா ? நான் என்பெட்டியை எப்போது பூட்டினேன் ? அது எப்பொழுதும் திறந்துதான் இருக்கும். போய் உனக்கு வேண்டியதை எடுத்துக்கொள்" என்று கூறினார். பணம் வைத்திருக்கும் பெட்டியை மட்டுமல்லாமல் மனத்தையும் எப்போதும் அவர் திறந்தே வைத்திருந்தார். இவ்வாறாக, இல்லை என வருவோருக்கு அள்ளி வழங்கும் வள்ளலாகத் திகழ்ந்தார்.

இத்தகு பெருமை வாய்ந்த கலைவாணருக்குப் பெருமைசேர்க்கும் வண்ணம் தமிழக அரசு சென்னையில் சிலை நிறுவியுள்ளது.

## சொல்பொருள்:

| | | |
|---|---|---|
| சதாவதானி | – | ஒரே நேரத்தில் நூறு செயல்களை நினைவில் வைத்துச் சொல்பவர் (நூறு கவனகர்) |
| மேதை | – | அறிவாளி |
| நல்கியது | – | கொடுத்தது |
| பார் | – | உலகம் |
| சொல்லொணா | – | சொல்ல இயலாத |
| பாமரர் | – | படிக்காதவர் |
| கையாளுவதில் | – | பயன்படுத்துவதில் |
| கயமை | – | கீழோரது தன்மை |
| மடமை | – | அறிவின்மை |
| நன்செய் | – | வயல் பகுதி |
| செவிமடுத்தனர் | – | கேட்டனர் |

## பயிற்சிகள்

### I. அ. வகுப்பறையில் பேசுக.

1. உனக்குத் தெரிந்த நகைச்சுவைத் துணுக்குகள் இரண்டினைக் கூறுக.
2. உனக்குப் பிடித்த நகைச்சுவைப் பாத்திரமேற்று நடித்துக் காட்டுக.

### ஆ. பொருளறிக, வரைக.

1. பாடப்பகுதியில் உள்ள கடினமான சொற்களை அடிக்கோடிட்டு அகரமுதலியைப் பார்த்துப் பொருள் அறிக.
2. பாடப்பகுதியில் நீ விரும்பும் செய்தியைக் கருத்துப் படமாக வரைக.

### இ. குறிப்புகளைப் பயன்படுத்திக் கட்டுரை எழுதுக.

1. நீ விரும்பும் தலைவரைப் பற்றி எழுதுக.
   முன்னுரை – பிறப்பு – இளமைப் பருவம் – கல்வி – பணி – சிறப்புகள் – முடிவுரை.
2. தன்வரலாறு கூறுதல். (எ.கா: ஆறு, வாழைமரம்)
   முன்னுரை – தோற்றம் – பயன்கள் – சிறப்புகள் – முடிவுரை.

### ஈ. பிரித்து எழுதுக.

1. தலைமையேற்ற = ____________________
2. வருங்காலத்தில் = ____________________
3. இதையெல்லாம் = ____________________
4. என்னென்ன = ____________________

## உ. சேர்த்து எழுதுக.

1. வாய்ப்பு + அளித்தனர் = ______________
2. கை + ஆள்வதில் = ______________
3. கூடி + இருந்தவர்கள் = ______________
4. வைத்து + இருக்கும் = ______________
5. அ + காலத்திலேயே = ______________

## ஊ. பேச்சு வழக்கிற்கு இணையான இலக்கிய வழக்குச் சொற்கள் அறிக.

| பேச்சு வழக்கு | – | இலக்கிய வழக்கு |
|---|---|---|
| 1. செய்யப் போறீங்க | – | செய்யப் போகிறீர்கள் |
| 2. விளக்கிப் போடுங்க | – | விளக்கிக் கூறுங்கள் |
| 3. அதுக்கொரு | – | அதற்கொரு |
| 4. போறேன் | – | போகிறேன் |

## எ. இலக்கிய வழக்காக மாற்றி எழுதுக.

1. வந்திட்டுருக்கேன் = ______________
2. குடுக்கிறீயா = ______________
3. வரலை = ______________
4. பேசுறியா = ______________
5. உக்கார் = ______________

## ஏ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. கலைவாணர் நடித்த நாடக விழாவிற்குத் தலைமையேற்றவர்
   (அ) பம்மல் சம்பந்த முதலியார் (ஆ) அறிவுடைய நம்பி
   (இ) சதாவதானி செய்குத் தம்பிப் பாவலர்
2. கலைவாணர் பிறந்த ஊர்
   (அ) நாங்குநேரி (ஆ) ஒழுகினசேரி (இ) வடசேரி
3. எழுத்தாளர் தொட்டு எழுதக் கூடாத மை
   (அ) பெருமை (ஆ) பொய்மை (இ) தூய்மை
4. நடராஜா கல்விக் கழக விழாவில் என்.எஸ். கிருஷ்ணனுக்குக் கிடைத்த பட்டம்
   (அ) நகைச்சுவை அரசு (ஆ) கலைவாணர் (இ) நகைச்சுவை நடிகர்
5. கலைவாணர் தனக்குத் தானே சூட்டிக்கொண்ட பட்டம்
   (அ) மனித நேயர் (ஆ) நாகரிகக் கோமாளி (இ) நடிகர் திலகம்

## ஐ. விடை எழுதுக.

1. என்.எஸ்.கிருஷ்ணன் பிறந்த ஊர் எது ? அவரது பெற்றோர் யாவர் ?
2. எழுத்தாளர்கள் எப்படிப்பட்ட மையைத் தொட்டு எழுதவேண்டும் என்று என்.எஸ்.கிருஷ்ணன் கூறுகிறார் ?
3. சிரிப்பின் சிறப்பை என்.எஸ்.கிருஷ்ணன் எவ்வாறு விளக்குகிறார் ?
4. கலைவாணர் ஒரு மனிதநேயர்– விளக்குக.
5. அறிவியல் வளர்ச்சி பற்றிக் கலைவாணர் கூறியவை யாவை ?

## II. அ. மயங்கொலி வேறுபாடு அறிந்து படிக்க.



1. முல்லை மலர் **மணம்** வீசியது.
   கள்ளம் கபடமற்ற **மனம்** வேண்டும்.
2. அப்பா **பணம்** வைத்திருந்தார்.
   நான் **பனம்பழம்** சாப்பிட்டேன்.
3. கண்ணனின் வெள்ளைச் சட்டையில் **கறை** படிந்திருந்தது.
   ஆற்றின் **கரை**யில் ஆலமரம் வளர்ந்திருந்தது.

## ஆ. சரியான ஒலிப்புடன் படிக்க.



இதன் பெயர் **எருமை**; பலருக்குத் தெரியாது
இதன் **அருமை**. இதன் நிறமோ **கருமை**;
**பொறுமை**யே இதன் **பெருமை**.

## இ. சொல்லிப் பழகுக.

1. கடல் வற்றட்டும் கருவாடு தின்றிடலாம் எனக் குடல் வற்றி இளைத்ததாம் கோடியக்கரைக் கொக்கு.
2. வண்ண வண்ணப்பூக்கள் கண்ணைக் கவரும், எண்ணமெல்லாம் கன்னலாய் இனிக்கும்.
3. பனி பொழியும் வேளையில் பணி செய்யும் மனிதர்கள்.
4. உருளுது புரளுது உலகம் சுழலுது, ஓடுது ஆடுது கூடுது குறையுது. இரவும் பகலும் இருட்டுது மிரட்டுது.

## ஈ. இணையான பொருள் தரும் ஓரெழுத்துச் சொல்லை எழுதுக.

(எ–டு) அரசன் – <u>கோ</u>

1. வருதல் – ____________
2. போதல் – ____________
3. செய்யுள் – ____________
4. மலர் – ____________
5. நெருப்பு – ____________
6. பசு – ____________

## உ. எண்ணுப் பெயர்களை எழுதிப்பழகுக.

12 = பன்னிரண்டு

13 = ____________________

14 = ____________________

15 = ____________________

16 = ____________________

17 = ____________________

18 = ____________________

19 = ____________________

20 = ____________________

21 = ____________________

## ஊ.எதிர்ச்சொல் அமைத்துச் சொற்றொடரை நிரப்புக.

1. இளமையில் கற்பது எளிது; ____________ கற்பது அரிது.
2. ஒற்றுமையுடன் வாழ்வது நன்று; வேற்றுமையை வளர்ப்பது ________.
3. நாம் புதுமையை ஏற்போம்; ____________ காப்போம்.
4. நல்லொழுக்கம் பெருமை சேர்க்கும்; தீயொழுக்கம் ______சேர்க்கும்.
5. குழந்தைகளைப் புகழ வேண்டும்; ____________கூடாது.
6. பகலில் தெரிவது கதிரவன்; ____________தெரிவது விண்மீன்.
7. நான் உண்மை பேசுவேன் ; ____________பேசமாட்டேன்.

## எ. தொகைச் சொற்களை விரித்து எழுதுக.

(எ.கா) முக்கனி = மா, பலா, வாழை

இருதிணை = ____________________

முத்தமிழ் = ____________________

முப்பால் = ____________________

நான்கு திசை = ____________________

ஐவகை நிலம் = ____________________

ஐந்திலக்கணம் = ____________________

அறுசுவை = ____________________

- நாட்டுக்கு உழைத்த நல்லோர் படங்களைச் சேகரித்து, அவர்களைப் பற்றி ஐந்து வரிகள் எழுதி வருக.
- உனக்கு விருப்பமான நகைச்சுவைத் துணுக்குகளைச் சேகரித்து வருக.

துணைப்பாடம்

# வெற்றியின் முதற்படி

"அம்மா! இன்று மாவட்ட அளவிலான விளையாட்டுப் போட்டிகள் நடைபெற உள்ளன. நான் ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ளப் போகிறேன். எனக்குத்தான் முதல் பரிசு கிடைக்கும். அதற்காகப் பல நாளாகப் பயிற்சி எடுத்துவருகிறேன்" என்றான் செந்தில்.

"மகனே! உனக்குத்தான் பரிசு. உன்னை வெல்ல எவர் இருக்கிறார்! நம்பிக்கையுடன் முயற்சி செய்" என்று வாழ்த்தினார் அவன் தாய்.

எதிர்பார்த்தபடியே செந்திலுக்கு முதல் பரிசு கிடைத்தது. வெற்றிக் கோப்பையுடன் வீட்டுக்கு வந்தான். அம்மா விருந்து சமைத்துக் கொண்டு இருந்தார். தான் வெற்றி பெற்ற செய்தியை யாரோ அம்மாவிற்குத் தெரிவித்து இருக்கிறார்கள். அதைக் கொண்டாடத்தான் அம்மா விருந்து செய்கிறார் என்று நினைத்தான்.



தாயை அணைத்துக் கொண்ட செந்தில், "அம்மா! நான் வெற்றி பெற்றது உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான். 'மகனே! நீ வெற்றி பெறுவாய் என்று எனக்கு உறுதியாகத் தெரியும். இந்த அட்டையைப் பார்' என்றார் அம்மா.

"மகனே! உன் வெற்றிக்கு வாழ்த்துகள். அதற்காகத்தான் இந்த விருந்து" என்று அதில் எழுதியிருந்தது. குடும்பத்தினருடன் செந்தில் விருந்தை மிக மகிழ்வோடு சுவைத்துச் சாப்பிட்டான்.



சிறிது நேரத்திற்குப்பின் செந்தில், அம்மா கொடுத்த அந்த அட்டையைக் கையில் எடுத்தான். பின்பக்கமும் ஏதோ எழுதி இருப்பதுபோலத் தெரிந்தது; திருப்பிப் பார்த்தான்.



அதில் 'அன்பு மகனே! தோல்வி ஏற்பட்டதற்காக வருந்தாதே; எதையும் மகிழ்ச்சியாக ஏற்றுக்கொள்; தோல்வியே வெற்றியின் முதற்படி; முயற்சி செய்; வெற்றி பெறுவாய்! அதற்காகத்தான் இந்த விருந்து' என்று எழுதியிருந்தது.

செந்தில், தன் தாயை எண்ணிப் பெருமிதம் அடைந்தான்.

### சிந்தித்துக் கூறுக.

- அட்டையின் இரண்டு பக்கமும் இரு வேறு செய்திகள் எழுதிய செந்திலின் அம்மாவைப் பற்றி என்ன நினைக்கிறாய் ?
- பள்ளியில் நடைபெற்ற போட்டியில் நீ வெற்றி பெற்றால், உன் பெற்றோர் எவ்வாறு பாராட்டுவர் ?

செய்யுள்

# பெண்கல்வி

இயல் – 5

தலைவாரிப் பூச்சூடி உன்னைப் பாட
சாலைக்குப் போஎன்று சொன்னாள் உன் அன்னை!



சிலைபோல ஏனங்கு நின்றாய்? – நீ
சிந்தாத கண்ணீரை ஏன்சிந்து கின்றாய்?
விலைபோட்டு வாங்கவா முடியும்? – கல்வி
வேளைதோ றும்கற்று வருவதால் படியும்!
மலைவாழை அல்லவோ கல்வி? – நீ
வாயார உண்ணுவாய் போஎன் புதல்வி!

படியாத பெண்ணா யிருந்தால் – கேலி
பண்ணுவார் என்னை இவ்வூரார் தெரிந்தால்
கடிகாரம் ஓடும்முன் ஓடு! – என்
கண்ணல்ல? அண்டை வீட்டுப் பெண்களோடு
கடிதாய் இருக்குமிப் போது! – கல்வி
கற்றிடக் கற்றிடத் தெரியுமப் போது!

கடல்சூழ்ந்த இத்தமிழ் நாடு – பெண்
கல்வி பெண்கல்விஎன் கின்றதன் போடு.

– பாவேந்தர் பாரதிதாசன்

## சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| தலைவாரி | – | தலைமுடியை ஒழுங்குபடுத்தி |
| அன்னை | – | தாய் |
| பாடசாலை | – | பள்ளிக்கூடம் |
| படியும் | – | மனத்தில் நிற்கும் |
| புதல்வி | – | மகள் |
| அண்டை வீடு | – | பக்கத்து வீடு |
| கடிதாய் | – | கடினமாய் |

## ஆசிரியர் குறிப்பு :



| | | |
|---|---|---|
| பெயர் | – | பாரதிதாசன். |
| இயற்பெயர் | – | சுப்புரத்தினம். |
| ஊர் | – | புதுச்சேரி |
| பெற்றோர் | – | கனகசபை , இலக்குமி அம்மையார். |
| காலம் | – | 29–04–1891 முதல்<br>21–04–1964 வரை |
| சிறப்புப்பெயர்கள் | – | பாவேந்தர், புரட்சிக்கவிஞர். |

## பயிற்சிகள்

### அ. வகுப்பறையில் பேசுக.

1. உன் தாய் உன்னைப் பள்ளிக்கு எவ்வாறு அனுப்பி வைப்பார் ?
2. பள்ளிக்குச் செல்வது உனக்கு மகிழ்ச்சியைத் தருகிறதா ?

### ஆ. பிரித்து எழுதுக .

1. பூச்சூடி = ____________________
2. ஏனங்கு = ____________________
3. இவ்வூரார் = ____________________
4. கண்ணல்ல = ____________________

### இ. உரிய விடையை எடுத்து எழுதுக.

1. நீ சிந்தாத கண்ணீரை ஏன் சிந்துகின்றாய் ? என்று கூறியவர்.

   ( அ ) தந்தை ( ஆ ) தாய் ( இ ) மகள்

2. மலை வாழை போன்றது கல்வி____________ அது இனிமையானது.

   ( அ ) அப்படியானால் ( ஆ ) ஏனெனில் ( இ ) ஆகையால்

3. பெண் குழந்தையைப் படிக்க வைக்காத பெற்றோரை

   ( அ ) பாராட்டுவர் ( ஆ ) வாழ்த்துவர் ( இ ) கேலிசெய்வர்.

### ஈ. விடை எழுதுக.

1. கல்வி எப்போது எளிமையாக அமையும் ?
2. பாரதிதாசனார் பெண்கல்வி பற்றி கூறுவன யாவை ?

உரைநடை

# உணவுத் திருவிழா

நகரின் மையப்பகுதியில் உள்ளது "பாரதிதாசன் குடியிருப்பு". சமூக நலனில் அக்கறை காட்டும் அக்குடியிருப்பு மக்கள், "மக்கள் நல விழிப்புணர்வு இயக்கம்" எனும் அமைப்பை உருவாக்கினர். அவ்வமைப்பினர் கண்தானம், இரத்ததானம், சாலை ஓரங்களில் மரக்கன்றுகள் நட்டுவளர்த்தல், குப்பைத் தொட்டிகள் அமைத்தல், ஏழைகளுக்கு உதவுதல் எனப் பல்வேறு நற்செயல்களைச் செய்து வருகின்றனர். அவர்கள் ஒரு நாள் கூடி, இன்றைய மக்கள் மேலை நாட்டு உணவுவகைகள்மீது ஆர்வங் கொண்டு நம் மரபுவகை உணவு வகைகளை மறந்து நோய்வாய்ப்படுகின்றனர்.

இன்றைய இளந்தலை முறையினரில் பலர்...
இளம் வயதிலேயே கண்ணாடி!
இருபது வயதிலேயே பெருந்தொந்தி!
முப்பது வயதிலேயே மூப்பு, மூட்டுவலி!
என துன்பப்படுகின்றனர்.

எங்கும் நோஞ்சான் குழந்தைகள், நோய்வாய்ப்பட்ட மனிதர்கள். அன்று உணவே மருந்து, இன்று மருந்தே உணவாகி விட்டநிலை. இந்நிலையை மாற்ற, நோயற்ற வாழ்வு வாழ, மரபுவகை உணவுகளின் சிறப்புத்தன்மையை விளக்கும் வகையில் உணவுத் திருவிழா நடத்துவது என்றும், உணவு பற்றிய விழிப்புணர்வு ஏற்படுத்துவது என்றும் முடிவு செய்தனர்.

"பாரதிதாசன் குடியிருப்பில் உணவுத் திருவிழா" என்று அச்சிட்டத்தாள் மக்களுக்கு வழங்கப்பட்டது. உணவுத் திருவிழா அன்று அக்குடியிருப்பில் ஒரே ஆரவாரம். ஆம். மக்கள் குடும்பம் குடும்பமாகக் கலந்து கொண்டனர். அங்கே பல்வேறு உணவு அரங்குகள் அமைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு அரங்கிலும் படங்களுடன் விளக்கங்கள் தாங்கிய பலகைகளும் வைக்கப்பட்டிருந்தன.

முதலில் 'கம்பரிசி கலந்த உணவுகள்' எனும் அரங்கம். அங்கே கம்பங்களி, கம்பங்கூழ், பனைவெல்லம் கலந்து வறுத்த கம்புமாவு உருண்டை, கம்பந்தோசை போன்ற உணவுகள் வைக்கப்பட்டிருந்தன. அவ்வரங்கில் இருந்தவர்கள் கம்பு அரிசியால் செய்யப்பட்ட உணவுகளைப் பார்வையாளர்களுக்கு வழங்கினர். உணவு சமைக்கும் முறை பற்றியும் எடுத்துக்கூறினர்.

**கம்பு** : புரதச்சத்து மிகுந்தது. அதிக ஆற்றலைத் தருவது உடல் வளர்ச்சிக்கு உதவுவது.



**சோளம்** : இரண்டாவது அரங்கில் சோளம் கலந்த உணவு சமைத்துக் காட்டப்பட்டது. வெண்ணிறப் பஞ்சு போன்ற மென்மையான சோளத் தோசை, சோளமாவு உப்புமா,சோளப் பிட்டு போன்ற சுவையான உணவுகள் சுடச்சுட வழங்கப்பட்டன . உயிர்ச்சத்து 'ஏ' மிகுந்தது. அடிக்கடி உணவில் சேர்த்துவரின் கண்பார்வை தெளிவு பெறும். புரதச்சத்து மிகுந்து இருப்பதால் உடல் வளர்ச்சிக்கு உதவுகிறது.



**கேழ்வரகு** : அடுத்ததாக, கேழ்வரகு, பயறு வகைகள், கீரைகள் கலந்த உணவுகள் உள்ள அரங்கு. அங்கே கேழ்வரகுஅடை, வடை, அதிரசம், கொழுக்கட்டை, பணியாரம் என விதவிதமான சுவையும் மணமும் கொண்ட சத்தான உணவுகள் செய்து காண்பிக்கப்பட்டன .பெரியவர்களுக்குக் கேழ்வரகுக் கூழும், குழந்தைகளுக்கு இனிப்புக் கலந்த கேழ்வரகுக் கஞ்சியும் வழங்கப்பட்டன. உறுதியான உடல் வளர்ச்சிக்குத் தேவையானது. புரதச்சத்து மிகுந்தது



**கீரைகள்** : இரும்புச்சத்து, தாதுஉப்புகள், மிகுந்தவை. தெளிவான கண்பார்வைக்கு உதவுகின்றன. இரத்தத்தில் சிவப்பு அணுக்கள் அதிகரிக்கவும் உதவுகின்றன. இரத்த சோகையைத் தடுக்கின்றன.



**பல்வகைப் பயறுகள்** : பயறுகள் புரதச்சத்து மிகுந்தவை. உடல் வளர்ச்சிக்கு அவசியமானவை. நோய் எதிர்ப்புச் சக்திக்கு உதவுகின்றன.அடுத்துக் காணப்பட்ட அரங்கில் " சுண்டல் வகைகள் " இருந்தன. முளைகட்டியப் பாசிப் பயறு, கொண்டைக் கடலை, தட்டைப்பயறு, மொச்சை போன்றவற்றை அவித்து சுண்டல் செய்து சுடச்சுடக் கொடுத்தனர். வறுத்த பயறுகளைக் கொண்டு குழந்தைகளுக்குச் சத்துமாவும், பெரியவர்களுக்குக் கஞ்சிமாவும் செய்வது எப்படி என விளக்கமும் அளித்தனர்.



முளைகட்டிய பயறுகளில் புரதம், அமினோ அமிலங்கள், இரும்பு, சுண்ணாம்பு, அயோடின், துத்தநாகம், உயிர்ச்சத்து ஏ, பி2, பி12, சி மற்றும் தாது உப்புகள் அடங்கியுள்ளன.

**கொள்ளுப் பயறு :**



கொள்ளுப் பயறு உடலில் உள்ள தேவையற்ற கொழுப்பைக் கரைக்க வல்லது.

அடுத்தடுத்துச் சில அரங்குகள். ஓர் அரங்கின் முகப்பில் 'கொழுத்தவனுக்குக் கொள்ளு' என்று எழுதப்பட்டிருந்தது. கொழுப்புச்சத்து மிகுதியால் உடற்பருமன் அடைந்தவர்கள் தங்கள் உடற்பருமனைக் குறைத்து உரிய உடலமைப்புப் பெற, கொள்ளு கலந்த உணவைச் சாப்பிட வேண்டும் என விளக்கம் கொடுத்தனர். அங்குக் கொள்ளுச்சாதம், கொள்ளுச் சுண்டல், கொள்ளுரசம், கொள்ளு வடை, கொள்ளுத் துவையல் முதலிய உணவுகளை வைத்திருந்தனர்.

அதன் எதிர்ப்பக்கம் இருந்த மற்றொரு அரங்கில்.. 'இளைத்தவனுக்கு எள்ளு !' என்னும் பதாகை. "உடல் மெலிந்தவர்களே... உடல் உறுதி அற்றவர்களே ... வாரீர் ! வாரீர் ! உடல் வளம் பெற எள் உணவு உண்பீர்" என்று கூவி அழைத்தனர். அவ்விடத்தில் எள்ளுப் பணியாரம், அதிரசம், எள்ளுருண்டை, எள்ளுப் பொடி என இனிய நறுமணத்துடன் விதம் விதமாய்ச் சிற்றுண்டிகள் இடம்பெற்றிருந்தன. இந்த இரு அரங்குகளிலும் மக்கள் கூட்டம் மிகுந்து காணப்பட்டது.

**எள் :**



எள் தோலுக்கு வனப்பும், கொழுப்புச் சத்தும் தரவல்லது. இது குடற்புண்களை ஆற்றக்கூடியது.

மற்றொரு அரங்கில்.. "உளுந்து சேர்த்த உணவுகள்". அங்கு, உடலுக்கு வலுவைத் தரும் உளுந்தங் களி, உளுந்தஞ் சோறு , உளுந்தங் கஞ்சியுடன் குளிர்ச்சி தரும் வெந்தயக் களி உண்ணக் கொடுத்தனர்.

மூட்டு வலிநீக்கும் ''முடக்கற்றான்'', எனும் பதாகையுடன் ஓர் அரங்கு. அங்கே முடக்கற்றான் தோசை சுடச்சுடச் சுட்டுக்கொடுத்தனர். பசுமையான இலைகளுடன் முடக்கற்றான் கொடியும் மக்களின் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தது.

அவித்த பனங்கிழங்குகளும், பனம்பழங்களும், பனை வெல்லத்தினால் செய்யப்பட்ட பலவகை இனிப்புகள், நிலக்கடலை, அவல் முதலியன அங்கு இருந்தன .







சுறுசுறுப்புக்குச் சூடான சுக்குநீர்!
குளிர்ச்சியைத் தரும் பனங்கற்கண்டு !
சூடு தணிக்கும் இளநீர் "! என்று கூறிக் கொடுத்தனர்.
இரத்தத்தைச் சுத்திகரிக்கும் அருகம்புல் சாறு!
நினைவாற்றலுக்கு வல்லாரை
"காமாலை நோய் போக்கும் கீழாநெல்லி!







நமது மரபுவகை உணவுகளை உண்டு மகிழ்ந்த மக்கள், "ஆகா! இவையல்லவோ உடலுக்குக் கேடு விளைவிக்காத சத்துமிக்க உணவுகள்" என்று பாராட்டினர். அயல் நாட்டு உணவுகளைத் தவிர்ப்போம், மரபுவகை உணவுகளைச் சமைத்து உண்போம் என்னும் மன உறுதியுடன் சென்றனர். வளாகத்தின் வெளிவாயிலில் மரபு வகை உணவுகள் செய்யும் முறைகள், பயன்கள் பற்றி அச்சடிக்கப்பட்ட துண்டுத் தாள்கள் வழங்கப்பட்டன.

"நாமும் மரபுவகை உணவுகளை உண்போம்"
"நோய் நொடியின்றி வாழ்வோம்"

**சொல்பொருள்:**

| | | |
|---|---|---|
| அயல் நாடு | – | வெளிநாடு |
| அவித்து | – | வேகவைத்து |
| அருகு | – | அருகம்புல் |
| பதாகை | – | அறிவிப்புகள் எழுதப்பட்ட துணி |

## பயிற்சிகள்

### I. அ. வகுப்பறையில் பேசுக.

1. உனக்குப் பிடித்த மரபுவகை உணவு எது? அதன் செய்முறையினை உன் பெற்றோரிடம் கேட்டுத் தெரிந்துகொள்க. வகுப்பறையில் கூறுக.

### ஆ. பிரித்து எழுதுக.

1. விழிப்புணர்வு = ____________
2. கம்பரிசி = ____________
3. உடற்பருமன் = ____________
4. குடியிருப்பு = ____________
5. எள்ளுருண்டை = ____________

### இ. கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. பாரதிதாசன் குடியிருப்பில் ____________ உணவுகளின் சிறப்பை விளக்க உணவுத் திருவிழா நடத்தினர்.
2. குழந்தைகளுக்குக் கேழ்வரகுக் ____________ வழங்கப்பட்டது.
3. கொழுத்தவனுக்குக் ____________ என எழுதப்பட்டிருந்தது.
4. மூட்டு வலி நீக்கும் கீரையின் பெயர் ____________
5. சுறுசுறுப்புக்குச் சூடான ____________ எனக்கூறினர்.

### ஈ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. பாரதிதாசன் ____________ உணவுத் திருவிழா நடைபெற்றது.
   ( அ ) குடியிருப்பால் ( ஆ ) குடியிருப்பில் ( இ ) குடியிருப்பை
2. மரபு வகை உணவு அல்லாதது ____________.
   ( அ ) கேழ்வரகுக் களி ( ஆ ) கம்பங்கூழ் ( இ ) பரோட்டா
3. பச்சையாக உண்ண முடியாதது ____________.
   ( அ ) வெள்ளரிக்காய் ( ஆ ) முருங்கைக்காய் ( இ )வெண்டைக்காய்
4. உணவாகப் பயன்படாதது ____________.
   ( அ ) முருங்கைக் கீரை ( ஆ ) அகத்திக் கீரை ( இ ) வாழை இலை
5. முடக்கற்றான் கீரை மூட்டு வலியை நீக்கும்____________. அதைச் சாப்பிட வேண்டும்.
   ( அ ) எனவே ( ஆ ) ஏனென்றால் ( இ ) ஏனெனில்

### உ. உன் வீட்டில் செய்யப்படும் மரபு வகை உணவுகளின் பெயர்களை எழுதுக.

| | | |
|---|---|---|
| ____________ | ____________ | ____________ |
| ____________ | ____________ | ____________ |
| ____________ | ____________ | ____________ |

## ஊ. விடை எழுதுக.

1. மரபு வகை உணவுகளை உண்ணாததால் ஏற்படும் தீமைகள் யாவை?
2. கம்பரிசியினால் சமைக்கப்படும் உணவு வகைகள் யாவை?
3. கேழ்வரகில் உள்ள சத்துகள் யாவை?
4. கொள்ளுப் பயறின் சிறப்பு யாது?
5. பனை மரத்திலிருந்து கிடைக்கும் உணவுப் பொருள்கள் யாவை?

## எ. கட்டுரை எழுதுக.

1. மரபு வகை உணவுகளும் அவற்றின் பயன்களும் குறித்து ஒருபக்க அளவில் கட்டுரை வரைக.

## II. அ. காரணப் பெயர்களோடு கூடிய இணைப்புச் சொற்களை அறிக.

1. ⇨ வளைந்து இருக்கிறது. எனவே இதற்குப் பெயர் வளையம்.

2. ⇨ மூன்று கோணங்கள் உள்ளன. எனவே இதற்குப் பெயர் முக்கோணம்.

3. ⇨ இதன் பெயர் நாற்காலி. ஏனெனில் இதற்கு நான்கு கால்கள் உள்ளன.

4. ⇨ இதற்குப் பெயர் பறவை; ஏனெனில் இது பறந்து செல்கிறது.

5. ⇨ இதன்பெயர் வண்ணத்துப்பூச்சி. ஏனெனில் இது பல வண்ணங்கள் கொண்டது.

## ஆ. உரிய இணைப்புச் சொல்லை எழுதுக.

1. நான் இன்று சமைத்தேன், ________________ என் அம்மா ஊருக்குச் சென்று விட்டார்.
2. மணி போட்டியில் வெற்றி பெற்றான் ________________ அவனுக்குப் பரிசு கிடைத்தது.
3. கயல்விழி பூந்தொட்டிக்குத் தண்ணீர் ஊற்றினாள் ________________ விதை நன்கு முளைத்தது.
4. மழை பொழிந்தது ________________ புற்கள் தழைத்தன.
5. கோடையில் பருத்தியாடை அணிய வேண்டும் ________________ அது உடலுக்கு நல்லது.

## இ. முடியும் வினைச் சொல்லை முதலாகக் கொண்டு தொடர் உருவாக்குக.

(எ.கா) பூங்குழலி தோட்டத்திற்குச் சென்றாள்.
சென்று மல்லிகைப்பூ பறித்தாள்.
பறித்த பூவைத் தொடுத்தாள்.
தொடுத்துத் தலையில் சூடினாள்.
சூடிப் பள்ளிக்குச் சென்றாள்.
சென்று தன் வகுப்பில் அமர்ந்தாள்.

கலையரசி நடனம் ஆடினாள்.

ஆடி ______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

## ஈ. புதிரைப்படித்து விடையைக் கண்டுபிடிக்க.

1. மலர்விழி சென்ற ஊர் மூன்றெழுத்து ஊர்.
முதலெழுத்து மடத்தில் உண்டு; குடத்தில் இல்லை.
இரண்டாம் எழுத்து மதுவில் உண்டு; மதியில் இல்லை.
மூன்றாம் எழுத்து அரையில் உண்டு; அறையில் இல்லை.
அந்த ஊர் எந்த ஊர் ?

### செயல் திட்டம்

- உன் ஊரில் கிடைக்கும் பல்வேறு தானியங்களைச் சேகரிக்க. அத்தானியங்களில் அடங்கியுள்ள சத்துகளைப் பெற்றோரிடம் கேட்டு எழுதி வருக.
- மருத்துவ குணங்கொண்ட தாவரங்களின் பெயர்களையும் அவற்றின் பயன்களையும் தொகுக்கவும்.

துணைப்பாடம்

# ஒற்றுமையே பலம்



ஒருநாள் மாலைப் பொழுது. மலர்விழி ஓய்வாக இருந்தாள். "ஆ! என் கை விரல்கள் என்னவோ செய்கின்றனவே...!"

கையிலுள்ள ஐந்து விரல்களுக்குள் 'யார் சிறந்தவர்?' என்ற போட்டி! 'நானா? நீயா?' என்ற வாதம். அது வாய்ச் சண்டையாக மாறியது. "என் உதவியின்றிச் சின்னஞ்சிறு பொருளைக்கூட உங்களால் தூக்க முடியாது", என்று செருக்குடன் கூறியது கட்டை விரல். 'சும்மா கிட! தற்பெருமை கொள்ளாதே. அவன், அவள், அது, இது எனச் சுட்டிக் காட்டுவது நான் தானே. 'நானே சிறந்தவன்' என்றது சுட்டு விரல்.

"நாம் எல்லாரும் வரிசையாக நிற்போம். உயரமானவர் யார்? எனப் பார்த்துவிடலாம்" என்று 'சவால் விட்டது' நடு விரல். "விலையுயர்ந்த மோதிரம் அணிவிப்பது யாருக்கு? எனக்குத்தான், எனது பெயரே 'மோதிர விரல்'. உங்கள் நால்வரினும் செல்வாக்கு மிக்கவன் நானே!" என்று 'பெருமை பேசியது' மோதிரவிரல். "கைகூப்பி வணக்கம் சொல்லும்போது முதலில் நிற்பவன் நான். எனக்குப்பின்தான், நீங்கள் எல்லாரும். எனவே, 'நானே பெரியவன்'" என்றது சுண்டுவிரல்.

அப்போது 'செல்லிடப்பேசி' ஒலித்தது. "மலர்விழி.. அதை எடுத்துவா!" என்றார் அம்மா. இதுவரை விவாதம் செய்து கொண்டிருந்த ஐந்து விரல்களும் தங்களை மறந்து ஒன்று சேர்ந்தன.

ஒன்றையொன்று பார்த்துக்கொண்டன. அவை என்ன பேசியிருக்கும்?

**சிந்திக்க**

➤ நீ உன் தங்கை தம்பிகளுக்காக எதற்காக எல்லாம் விட்டுக் கொடுப்பாய்?

செய்யுள்

# கும்மியடிப் பெண்ணே கும்மியடி





கும்மியடி! தமிழ்நாடு முழுதும்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி!
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மை கண்டோ மென்று கும்மியடி! (கும்மியடி)

ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்று
எண்ணி யிருந்தவர் மாய்ந்து விட்டார்
வீட்டுக் குள்ளே பெண்ணைப் பூட்டிவைப் போமென்ற
விந்தை மனிதர் தலை கவிழ்ந்தார். (கும்மியடி)

பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக் கிங்கேபெண்
இளைப் பில்லை காணென்று கும்மியடி! (கும்மியடி)

– மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

## சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| போயின | – | நீங்கின |
| ஏடு | – | புத்தகம் |
| மாய்ந்து | – | இறந்து |
| பாரினில் | – | உலகில் |
| இளைப்பில்லை | – | குறைவில்லை |



## ஆசிரியர் குறிப்பு :

| | | |
|---|---|---|
| பெயர் | – | சுப்பிரமணிய பாரதியார். |
| ஊர் | – | எட்டையபுரம் |
| பெற்றோர் | – | சின்னசாமி, இலக்குமி அம்மையார் |
| சிறப்புப்பெயர் | – | தேசியக்கவி, மகாகவி. |
| காலம் | – | 11.12.1882 முதல் 11.09.1921 வரை. |

## கும்மி – விளக்கம் .

கும்மிப்பாடல் நாட்டுப் பாடல்களில் ஒருவகை ஆகும். பெண்கள் வட்டமாய் நின்று கைகொட்டிப் பாடி ஆடுவது கும்மிப் பாடல். பெண்கள் அணிந்திருக்கும் வளையலின் ஓசையும் கைத்தட்டும் ஓசையும் பாட்டுக்குத் தாளமாக அமைவது கும்மிப் பாடலின் சிறப்பு ஆகும்.

## பயிற்சிகள்

### அ. வகுப்பறையில் பேசுக.

1. உங்கள் ஊர்த் திருவிழாவில் நடைபெறும் ஆட்டங்கள் பற்றிக் கூறுக.

### ஆ. பிரித்து எழுதுக.

1. தீமையென்று = ____________________
2. எண்ணியிருந்தவர் = ____________________
3. ஆணுக்கிங்கே = ____________________
4. இளைப்பில்லை = ____________________
5. காணென்று = ____________________

### இ. விடை எழுதுக.

1. பாரதியார் பற்றிக் குறிப்பு வரைக.
2. கும்மி – விளக்குக.
3. கும்மிப்பாடல் உணர்த்தும் கருத்துகள் யாவை ?

உரை நடை

# சித்திரைப் பொருட்காட்சி

கோடை விடுமுறை, ஆதவனுக்கு மகிழ்ச்சி. மதுரையில் உள்ள மாமாவின் வீட்டுக்குக் குடும்பத்துடன் புறப்பட்டான். மகிழுந்தில் ஏறி எழில்மிகு சென்னையின் எழும்பூர் தொடர்வண்டி நிலையத்தை அடைந்தான். அப்பொழுது தொடர்வண்டி புறப்படும் சத்தம் கேட்டது.




“அப்பா, தொடர்வண்டி போய்விடப் போகிறது” விரைவுபடுத்தினான் ஆதவன். அப்பா, “நாம் செல்ல வேண்டிய பாண்டியன் விரைவுத் தொடர்வண்டி 9.15 மணிக்குத்தான் புறப்படும். அதோ பார்! பயணநேர அறிவிப்புப் பலகை. அதில் தொடர் வண்டியின்பெயர், வண்டி எண், நிற்கும் இடம் ஆகியன குறிப்பிடப்பட்டுள்ளன”என்றார்.

ஆதவன் ஆர்வத்துடன் அறிவிப்புப் பலகையைப் பார்த்தான்.

| வண்டி எண் | வண்டியின்பெயர் | புறப்படும் நேரம் | நடை மேடை |
|---|---|---|---|
| 2661 | செங்கோட்டை பொதிகை விரைவு வண்டி | 20.05 | 6 |
| 2631 | நெல்லை விரைவு வண்டி | 20.50 | 5 |
| 2637 | மதுரை பாண்டியன் விரைவு வண்டி | 21.15 | 4 |
| 6701 | இராமேசுவரம் விரைவு வண்டி | 21.40 | 3 |

ஆதவன், ''அப்பா, பாண்டியன் விரைவு வண்டி புறப்படும் நேரம் 21.15 என எழுதி உள்ளதே! நீங்கள் 09.15 என்றீர்கள் ஒன்றும் புரியவில்லையே'' என்றான். ஆதவனின் அப்பா, ''தொடர்வண்டி நேரம் 24 மணி அடிப்படையில்தான் கணக்கிடப்படும். அதனால்தான் இரவு 9.15 என்பதை 21.15 என்று எழுதியுள்ளனர்'' என்று விளக்கினார்.

ஆதவன், ''அப்படியானால் 20.05 மணி என்றால் 08.05 மணி தானே'' என்றான். ''சரியாகச் சொன்னாய், சரி வாருங்கள் நாம் செல்ல வேண்டிய தொடர்வண்டி வந்துவிட்டது ஏறிக் கொள்வோம்'' என்றார் அப்பா. தொடர்வண்டி மதுரை வந்து சேர்ந்தது. மகிழ்ச்சியோடு இறங்கினர். தொடர்வண்டிச் சந்திப்பு வாயிலில் ஒரு விளம்பரத்தைக் கண்டனர். அந்த விளம்பரத்தில்....

**சித்திரைப் பொருட்காட்சி**

இடம் : தமுக்கம் மைதானம், நாள் : 03.05.2011 – 30.05.2011

- நூல்கள்
- விளையாட்டுப் பொருள்கள்
- கைவினைப் பொருள்கள்
- கைத்தறித் துணிகள்
- பொழுது போக்கு நிகழ்ச்சிகள்

அனைவரும் வருக! கண்டு மகிழ்க! ஆதரவு தருக!

ஆதவன், ''அம்மா, பொருட்காட்சிக்குப் போகலாமா?'' என்று கேட்டான். ''நாளைக்குப் போகலாம். மாமா வீட்டுக்கு இப்பொழுது செல்வோம்'' என்று அம்மா கூறினார். புதூர் செல்வதற்காகப் பெரியார் பேருந்து நிலையத்தை அடைந்தனர்.

ஆதவன், ''அப்பா! அப்பா! அதோ பேருந்துக் கால அட்டவணை. அதில் புதூர் செல்லும் பேருந்து எண்ணும் புறப்படும் நேரமும் குறிப்பிடப்பட்டுள்ளன'' என்றான்.

அப்பொழுது, புதூர் செல்லும் 2 ஆம் எண் பேருந்து வந்தது. அதில் ஏறி, மாமா வீட்டை அடைந்தனர்.

| பேருந்து எண் | ஊர் | புறப்படும் நேரம் |
|---|---|---|
| 3 | பழங்காநத்தம் | 6.30 மு.ப |
| 4 | தெப்பக்குளம் | 7.00 மு.ப |
| 2 | புதூர் | 7.15 மு.ப |
| 23 | திருப்பாலை | 7.30 மு.ப |
| 75 | மேலூர் | 7.35 மு.ப |

அடுத்த நாள் ஆதவன், மாமாவுடன் இருசக்கர வண்டியில் பொருட்காட்சிக்குச் சென்றான்.




1. நுழைவுச்சீட்டு வழங்குமிடம்
2. பொம்மை உலகம்
3. கைவினைப் பொருள்கள்
4. விளையாட்டுப் பொருள்கள்

5,6. புத்தகப் பிரிவு

7. கைத்தறிக் கூடம்
8. இராட்டினம்
9. விந்தை நிகழ்ச்சிப் பிரிவு

10,11. உணவகம்

12. வீட்டுப் பயன்பாட்டுப் பொருள்கள்
13. கழிப்பிடவசதி
14. வாகனங்கள் நிறுத்துமிடம்

நுழைவுச் சீட்டைப் பெற்றுக் கொண்டு இருவரும் உள்ளே சென்றனர்; பொருட்காட்சியைச் சுற்றிப் பார்த்தனர்; இராட்டினத்தில் சுற்றினர்; பொம்மை, கைக்குட்டை, பந்து, கதைப் புத்தகம் ஆகியவற்றை வாங்கினர்; சிற்றுண்டி உண்டனர்; வீட்டுக்குப் புறப்பட்டனர். ஆதவன், "மாமா, அங்கே 'தலைக்கவசம் உயிர்க்கவசம்' என்று எழுதப்பட்டுள்ளது. நீங்கள் உங்கள் தலைக்கவசத்தை எடுத்து அணிந்து கொள்ளுங்கள்" என்றான். வரும் வழியில் ஆதவன் விளம்பரங்களைப் பார்த்துக் கொண்டே வீடு வந்து சேர்ந்தான்.



## பயிற்சிகள்

### I. அ. வகுப்பறையில் பேசுக.

1. நியாய விலைக்கடையில் எழுதிவைக்கப்பட்டிருக்கும் அறிவிப்புகளையும் விலைப் பட்டியலையும் படித்து அறிக.
2. சிறுவர் இதழ்களில் வெளிவரும் புதிர்கள், விடுகதைகள் ஆகியவற்றைப் படித்து விடை எழுதி வருக.
3. பள்ளி ஆண்டு விழா, திருமண விழா அழைப்பிதழ்களைப் படித்துத் திரட்டி வருக.
4. செய்தித்தாள்களில் உள்ள விளம்பரங்கள், விழா அழைப்பிதழ்களைப் படித்து மகிழ்க.

## ஆ. பிரித்து எழுதுக.

1. தொடர்வண்டி = ______________________
2. வண்டியிலிருந்து = ______________________
3. பொருட்காட்சி = ______________________
4. நுழைவுச்சீட்டு = ______________________
5. எழுதியிருந்தது = ______________________

## இ. சேர்த்து எழுதுக.

1. மகிழ் + உந்து = ______________________
2. கணக்கு + இடப்படும் = ______________________
3. நூறு + எட்டு = ______________________
4. கை + தறி = ______________________
5. தலை + கவசம் = ______________________

## ஈ. வினாக்களுக்கு விடை எழுதுக .

1. ஆதவன் தொடர் வண்டியில் ஏறி எங்குப் புறப்பட்டான் ?
2. சித்திரைப் பொருட்காட்சி எந்த ஊரில் எப்பொழுது நடைபெற்றது ?

## II.அ .செய்தித்தாள் படித்தறிக :



**ஒரே நேரத்தில் 15,115 மாணவர்கள் கை கழுவிய நிகழ்ச்சி 'கின்னசு' புத்தகத்தில் இடம் பிடித்தது.**

சென்னை, ஜூன் – 10 நேரு உள்விளையாட்டு அரங்கில் உலகச் சுகாதார அமைப்பு சார்பில் ஒரே நேரத்தில் 15,115 மாணவர்கள் கை கழுவிய நிகழ்ச்சி 'கின்னசு சாதனைப்' புத்தகத்தில் இடம் பெற்றுள்ளது.

இது குறித்துத் தமிழக நல்வாழ்வுத்துறை முதன்மைச் செயலாளர் வெளியிட்ட அறிக்கை.

கைகள் சுத்தமாக இல்லாமல் இருந்தால் குழந்தைகளுக்கு வயிற்று நோய் ஏற்படுகிறது. உணவு உண்பதற்கு முன்பும், கழிவறையில் இருந்து வந்த பின்பும் சோப்புப்போட்டுக் கை கழுவுவது மிக அவசியம்.

இதனால் குழந்தைகளுக்கு ஏற்படும் நோய்களை 25 சதவீதம் தடுக்க முடியும். இதைக் கருத்தில் கொண்டு உலகச் சுகாதார நிறுவனம் ஒவ்வொரு ஆண்டும் அக்டோபர் 15ஆம் தேதியை 'உலக கை கழுவும் நாள்' என்று அறிவித்துள்ளது. உலகச் சுகாதார நிறுவனம் சார்பில் நடைபெற்ற கை கழுவும் நிகழ்ச்சியில் சென்னை மாநகராட்சி மற்றும் தனியார் பள்ளிகளைச் சேர்ந்த 15,115 மாணவ, மாணவிகள் ஒரே நேரத்தில் கைகளைக் கழுவிச் சாதனை படைத்தனர்.

இவ்வாறு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## ஆ. சொல்லுக்குள் உள்ள சொற்களைக் கண்டுபிடிக்க.

(எ.கா) : கருத்துகள் – கருத்து, துகள், கருது, கள், கரு

1. விளையாட்டு = ________________
2. தூத்துக்குடி = ________________
3. பூங்கொத்து = ________________
4. வரிக்குதிரை = ________________
5. கண்காட்சி = ________________

## III. அ. இணைப்புச் சொற்களை அறிக.

1. புத்தகக் கண்காட்சியில் திருக்குறள், பாரதியார் கவிதைகள், அறிவூட்டும் கதைகள் ஆகிய நூல்களை வாங்கினேன்.
2. அன்னை தெரசா இரக்கக் குணம் உடையவர்; ஆகையால் ஆதரவற்றவர்க்கு உதவினார்.
3. மழை நன்கு பொழிந்தது; ஆகவே விளைச்சல் பெருகியது.
4. பொன்மணிக்குப் பாடத்தெரியும் ஆனால் ஆடத்தெரியாது.
5. எனக்குத் தமிழ், ஆங்கிலம், இந்தி, மலையாளம் முதலிய மொழிகள் தெரியும்.

## ஆ. கோடிட்ட இடங்களைச் சரியான இணைப்புச் சொற்களால் நிரப்புக.

1. எனக்குக் கொய்யாப்பழம் பிடிக்கும் ____________வீட்டில் கொய்யாமரம் வளர்க்கிறேன்.
2. தமிழ்,ஆங்கிலம், கணக்கு, அறிவியல், சமூக அறிவியல் ____________ பாடங்கள் நமக்கு உள்ளன.
3. குளத்தில் தாமரை பூத்திருந்தது ____________ குளம் அழகாகக்காட்சியளித்தது.
4. தமிழரசி போட்டியில் வெற்றி பெறவில்லை ____________அவள் மனம் தளரவில்லை.
5. அன்புச் செழியன் கடினமாக உழைத்தான் ____________ அவன் வாழ்வில் உயர்ந்தான்.

**செயல்திட்டம்.**

- நாளிதழ், வார இதழ்களில் வெளிவரும் அறிவிப்புகள், விளம்பரங்களைத் திரட்டி வருக.

துணைப்பாடம்

## காடையின் நுண்ணறிவு

ஓர் அறுவடைக் காலம். நெல் வயலில் பயிர்கள் நன்கு வளர்ந்து கதிர்கள் முற்றியிருந்தன. அந்த வயலுக்குள் காடைப்பறவை ஒன்று கூடுகட்டித் தன் குஞ்சுகளுடன் வாழ்ந்து வந்தது. குஞ்சுகளுக்கு இன்னும் முழுமையாக இறகுகள் வளரவில்லை.

ஒருநாள் தாய்ப்பறவை இரை தேடுவதற்காக வெளியில் சென்றிருந்தது. அச்சமயத்தில் வயலின் சொந்தக்காரர் வயலைச் சுற்றிப் பார்த்தார். 'கதிர்கள் நன்றாக முற்றிவிட்டன. நாளையே அண்டை அயலார் உதவியுடன் அறுவடை செய்ய வேண்டும்' என்று தனக்குத்தானே கூறிக்கொண்டே சென்றார்.

திகிலடைந்த குஞ்சுகள் தாய்ப்பறவை கூட்டுக்குத் திரும்பியவுடன் நடந்ததைக் கூறின. தாய்ப்பறவை, 'என் செல்வங்களே கவலைப்படாதீர்கள்! அண்டை அயலார் ஒவ்வொருவரும் தங்களது வேலைகளில் ஈடுபட்டிருப்பர். எனவே, நாளை வயலுக்குச் சொந்தக்காரர் அறுவடை செய்ய வரமாட்டார். பொறுத்திருப்போம்' என்று கூறியது.



மறுநாள் காலை வயலுக்கு வந்த வயலின் சொந்தக்காரர், மிகவும் கவலையுடன், 'நாள்கள் தள்ளிப் போனால் நெல் வீணாகி விடுமே!. சுற்றத்தார் உதவி கொண்டாவது நாளையே அறுவடை செய்ய வேண்டும்' என்று கூறிக்கொண்டே சென்றார்.

மாலை கூட்டிற்குத் திரும்பிய தாய்ப்பறவையிடம் குஞ்சுகள் மீண்டும் முறையிட்டன. அப்போதும் தாய்ப்பறவை, "என் கண்மணிகளே! நாளையும் அவர் அறுவடை செய்யமாட்டார். ஏனெனில், சுற்றத்தாருக்கும் நெல்வயல்கள் இருக்கும். அவர்கள் வருவது சந்தேகம் தான். எனவே, பொறுத்திருப்போம்" என்று கூறியது.

மறுநாள் வயலைப் பார்க்க வந்த வயலின் சொந்தக்காரர், 'இனி யாரையும் நம்பிப் பயனில்லை. நாளையே நானும் என் குடும்பத்தினரும் வந்து அறுவடை செய்துவிட வேண்டியதுதான்' என்று கூறிக்கொண்டே சென்றார். மாலையில் கூட்டுக்குத் திரும்பிய தாய்ப்பறவை நடந்ததை அறிந்தவுடன், 'குழந்தைகளே, நாம் உடனே பாதுகாப்பான வேறு இடத்திற்குச் செல்ல வேண்டும்' என்று குஞ்சுகளைப் பாதுகாப்பான இடத்திற்குக் கூட்டிச் சென்றது.

தன் உழைப்பையே நம்பிச் செயல்படுபவர்கள் தம் பணியை விரைந்து முடிப்பர். 'தன் கையே தனக்குதவி' என்பது ஆன்றோர் வாக்கு.

**சிந்திக்க!**

- வயலின் சொந்தக்காரராக நீ இருந்திருந்தால் என்ன செய்திருப்பாய்?
- தாய்ப்பறவையாக நீ இருந்திருந்தால் என்ன செய்திருப்பாய்?
- காடையின் நுண்ணறிவுத் திறன் குறித்துச் சிறு குழுவில் கலந்துரையாடுக.

செய்யுள்



## நூறு வயது தருவன!



உடலின் உறுதி உடையவரே
உலகில் இன்பம் உடையவராம்;
இடமும் பொருளும் நோயாளிக்கு
இனிய வாழ்வு தந்திடுமோ?

சுத்த முள்ள இடமெங்கும்
சுகமும் உண்டு நீயதனை
நித்தம் நித்தம் பேணுவையேல்,
நீண்ட ஆயுள் பெறுவாயே!

காலை மாலை உலாவிநிதம்
காற்று வாங்கி வருவோரின்
காலைத் தொட்டுக் கும்பிட்டுக்
காலன் ஓடிப் போவானே!

கூழை யேநீ குடித்தாலும்,
குளித்த பிறகு குடியப்பா!
ஏழை யேநீ ஆனாலும்
இரவில் நன்றாய் உறங்கப்பா!

தூய காற்றும் நன்னீரும்,
சுண்டப் பசித்த பின்உணவும்,
நோயை ஓட்டி விடுமப்பா
நூறு வயதும் தருமப்பா!

– கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

### சொல்பொருள்:

1. நித்தம் – நாள்தோறும்
2. பேணுதல் – பாதுகாத்தல்
3. ஆயுள் – வாழ்நாள்
4. உலாவி – நடந்து
5. சுண்டப் பசித்த – நன்கு பசித்த
6. காலன் – எமன்

## பயிற்சிகள்

### அ. வகுப்பறையில் பேசுக.

1. உன் பள்ளியில் / ஊரில் விளையாடும் விளையாட்டுகள் பற்றிக் கூறுக.
2. 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பதைக் குறித்துப் பேசுக.

### ஆ. பிரித்து எழுதுக.

1. இடமெங்கும் – ______________________
2. நன்னீர் – ______________________
3. உறங்கப்பா – ______________________
4. நீயதனை – ______________________

### இ. கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. நம்மைச் சுற்றியுள்ள இடத்தை ____________ வைத்திருக்க வேண்டும்.
2. நன்கு ____________ பின்னரே உணவு உண்ண வேண்டும்.
3. உடலைத் தூய்மையாக வைக்க நாள்தோறும் ____________ வேண்டும்.
4. சுத்தம் ____________ தரும்.

### ஈ. இப்பாடலுடன் தொடர்புடைய பழமொழிகளை எழுதுக.

(எ.கா.) : கூழானாலும் குளித்துக் குடி.

1. ______________________________
2. ______________________________
3. ______________________________

### இ. ஓர் எழுத்தைச் சேர்த்தும் நீக்கியும் புதிய சொல் உருவாக்குக.

(எ.கா) மகள் – மக்கள்

1. படம் – ____________
2. விதை – ____________
3. பாடு – ____________
4. முறம் – ____________
5. கல் – ____________

(எ.கா) வளையல் – வயல்

1. உணர்வு – ________
2. கோட்டை – ________
3. புயல் – ________
4. அரும்பு – ________
5. மந்தி – ________

### உ. விடை எழுதுக.

1. எப்பொழுது உண்ண வேண்டும் ?
2. எவரைக் கண்டால் எமன் ஓடிப்போவான் ?
3. நூறு வயது தருவன எவை ?

உரைநடை

## களப்பயணம் செல்வோம்

திருவள்ளூர் மாவட்டம், திருவூர் அரசுத் தொடக்கப் பள்ளியில் ஐந்தாம் வகுப்புப் படிக்கும் மாணவர்கள் தம் ஆசிரியருடன் வேளாண்மை அறிவியல் நிலையத்திற்குக் களப்பயணம் சென்றனர்.

நிலையத்தின் முன்புறம் அமைந்துள்ள அலங்காரச் செடிகள், பசுமையான புல்வெளி, அழகிய வண்ணப்பூக்கள் ஆகியவை மாணவர்களை வரவேற்றன. ஆங்கே தென்னை மரங்களின் ஓலைகள் காற்றில் சலசலத்தன. மாமரக் கிளையிலிருந்த குயில்கள் 'கூ...கூ..' எனக் கூவிக் கொண்டிருந்தன. பலா மரங்களில் பலாப் பழங்கள் பழுத்துத் தொங்கின. இவற்றையெல்லாம் மாணவர்கள் பார்த்து மகிழ்ந்து கொண்டே சென்றனர்.

அப்போது நெல்ஆராய்ச்சி நிலைய ஆய்வாளர் மாணவர்களை வரவேற்று, நிலையத்தைச் சுற்றிப் பார்க்க அழைத்துச் சென்றார்.

**ஆய்வாளர்:** மாணவர்களே ! நம் மாநிலத்தில் முப்பதுக்கும் மேற்பட்ட வேளாண் ஆராய்ச்சி நிலையங்கள் உள்ளன. அம்பாசமுத்திரம், ஆடுதுறை, திருப்பதிசாரம், மதுரை முதலிய இடங்களிலும் நெல் ஆராய்ச்சி செய்யப்படுகிறது. இங்கு அதிக விளைச்சல் தரும் புதிய நெல்வகைகளை உருவாக்குதல், பழ மரக்கன்றுகள், காய்கறி விதைகள் ஆகியவற்றை உற்பத்தி செய்தல், விவசாய முறைகள் பற்றி பயிற்சி அளித்தல் போன்ற பணிகள் நடைபெறுகின்றன.

**முகிலன்** : டிகேஎம் 9 , டிகேஎம் 11, டிகேஎம் 12 என எழுதப்பட்ட பலகைகளை வயல்களில் ஆங்காங்கே வைத்துள்ளீர்களே ? ஏன் ?



ஆய்வாளர் : அது ஒவ்வொன்றும் ஒரு நெல்வகையின் பெயர். டிகேஎம் 11 என்பது இந்நிலைய ஆராய்ச்சியின் பதினோராவது கண்டுபிடிப்பு ஆகும். இங்குப் பன்னிரண்டு புதிய நெல் வகைகளைக் கண்டுபிடித்து அறிமுகப்படுத்தியுள்ளோம்.

அன்பு : இவை, பார்ப்பதற்கு ஒரே மாதிரியாகத் தெரிகின்றனவே! இவற்றின் சிறப்பு என்ன ?

ஆய்வாளர் : பொதுவாக, நெல் விதைகளை நீர்வளம் நிறைந்த இடங்களில் பயிர் செய்வார்கள். நெற்பயிருக்குத் தண்ணீர் அதிகமாகத் தேவை. ஆனால், இவ்வகைப்பயிர்கள் நீர்வளம் குறைந்த இடங்களிலும் வறட்சியைத் தாங்கி வளரக்கூடியவை; அதிக விளைச்சலும் தரக்கூடியவை.

எழிலரசி : வறட்சியைத் தாங்கும் என்று சொல்கிறீர்களே! தண்ணீரே தேவையில்லையா ?

ஆய்வாளர் : இல்லை! இல்லை! ஓரளவு வறட்சியைத் தாங்கும். இவ்வாராய்ச்சி நிலையத்தில் புழுதிக் கால், மானாவாரி, இறவைச் சூழல்களுக்கு ஏற்ற அதிக விளைச்சல் தரும் நெல் வகைகளை, ஆராய்ந்து உருவாக்குகிறோம் . இதுவே இந்நிலையத்தின் தலையாய பணி. இதோ இங்கு விதைக்கப்பட்டுள்ள டிகேஎம் 11, டிகேஎம் 12 என்ற நெல் வகைகள், வறட்சியைத் தாங்கி வளரக்கூடியவை. மழை பெய்தவுடன் புதிய துளிர் விட்டு நன்கு செழித்து வளரும். பூச்சிகள் தாக்காது, நோய்எதிர்ப்புத் திறன் கொண்டது.

பாரதி : எங்கள் நிலத்தில் எதுவும் சரியாக விளைவதில்லை.' 'கிணற்று நீர் சற்று உவர்ப்புடன் உள்ளது' என்று அப்பா கூறுவார்.



ஆய்வாளர் : அங்கே பாருங்கள். டிகேஎம் 7 எனப் பெயர் தாங்கிய பலகை. அந்த நெல் உவர் நிலத்திலும் , களர் நிலத்திலும் செழிப்பாக வளர்ந்து நல்ல விளைச்சல் தரும்.

(அப்போது டக ... டக ... டக...வெனச் சத்தம். மாணவர்கள் திரும்பிப் பார்த்தனர் அங்கே அறுவடை செய்யும் இயந்திரம். அது கதிர்களை அறுத்தது . அறுபட்ட நெற்கதிர்களை உள்வாங்கி நெல்மணிகளைப் பெட்டியில் சேகரித்தது. வைக்கோல்களை மறுபுறம் வெளியேற்றிக் கொண்டிருந்தது)

குமதவல்லி: ஓர் இயந்திரம் மூன்று வேலைகளை ஒரே நேரத்தில் செய்கிறதே! ஒரே கல்லில் மூன்று மாங்காய்கள்.

(அனைவரும் சிரித்தனர்)



ஆய்வாளர் : அதோ பாருங்கள் ! மருந்து தெளிக்கும் கருவி, உழும் இயந்திரம், நடவு செய்யும் இயந்திரம், களை எடுக்கும் கருவி, விதை விதைக்கும் கருவி, பருப்பு உடைக்கும் கருவி, உரம் இடும் கருவி, புல் வெட்டும் கருவி, குலையிலிருந்து பாக்கைப் பிரித்தெடுக்கும் கருவி எனப் பல வேளாண் கருவிகள் உள்ளன. இக்கருவிகளைப் பயன்படுத்துவதால் வேலைகள் விரைவாக நடை பெறுகிறது; செலவும் குறைகிறது.

(அப்போது மே... மே.... என ஆடுகள் கத்துவதைக் கேட்டனர்)

எழிலரசி : இந்த ஆடுகள் வெள்ளை வெளேரென்று கொழுகொழுவென்று அழகாக உள்ளனவே!

ஆய்வாளர் : இவை கேரள மாநிலத்தில் உள்ள தலைச்சேரியிலிருந்து வருவிக்கப்பட்ட ஆடுகள் ஆகும். அதிகமாகப் பால் தரக்கூடியவை. இவற்றைத் தமிழ்நாட்டில் இனப்பெருக்கம் செய்வதற்காக இங்குப் பண்ணை அமைத்து வளர்க்கிறோம்.

குமதவல்லி: ஆட்டுக்குட்டி எந்தன் குட்டி
அருமையான சின்னக்குட்டி
ஓட்டம் ஓடி வந்திடுவாய்
உனக்கு முத்தம் தந்திடுவேன் ...
(பாடினாள்)



(அனைவரும் கைதட்டினர்,
ஆட்டுக் குட்டிகளைப் பார்த்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தனர்)

பாரதி : இங்குப், பாசிப்பயறு, துவரை, உளுந்து போன்றவை மிகவும் பசுமையாக வளருகின்றன. ஆனால், எங்கள் தோட்டத்தில் இவைபோன்று வளருவதில்லையே ஏன் ?

ஆய்வாளர் : அதோ! அந்தத் தொட்டிகளில் இலைதழைகள், மாட்டுச்சாணம், கரும்புச்சக்கை ஆகியவற்றை மண்புழுக்களால் மக்கச் செய்து, மண்புழு உரம் தயாரித்து வருகிறோம். இங்குள்ள வயல்களில் தக்கைப் பூண்டு, சணப்பை முதலிய பசுந்தாள் உரங்களும் 'அசோலா' எனும் நுண்ணுயிர் உரமும் இடப்படுவதால் பயிர்கள் நன்குச் செழித்து வளருகின்றன.

பாரி : அது என்ன கூடாரம் ? பசுமைக்குடில் என்று பெயர் சூட்டப்பட்டுள்ளதே!





ஆய்வாளர் : ஆம். அது வெப்பம் அதிகம் தாக்காதவாறு அமைக்கப்பட்டுள்ள இடம் . அதனுள் சென்று பார்ப்போம். (உள்ளே நெகிழிப்பைகளில் சிறு சிறு மரக்கன்றுகள், தொட்டிகளில் உள்ள கன்றுகளின் அருகில் இமாம்பசந்து, ருமானி, செந்தூரம், நீலம், மல்கோவா, பெங்களூரா, பங்கனப்பள்ளி என எழுதப்பட்ட அட்டைகள்) இவையெல்லாம் பலவகைப்பட்ட மாங்கன்றுகள். இவை ஒட்டுவகையைச் சார்ந்தவை. குறுகிய காலத்தில் வளர்ந்து அதிக விளைச்சலைத் தரக்கூடியவை.

பாரதி : அங்கு பலர் குழுமி இருக்கிறார்களே ? ஏதேனும் பயிற்சி வகுப்பு நடைபெறுகிறதா ?

முகிலன் : பாரதி , அங்குள்ள பெயர்ப் பலகையைப் பார். 'உழவர் பயிற்சி விடுதி' என்று எழுதப்பட்டுள்ளது.

ஆய்வாளர் : நன்று . அங்கு உழவர்களுக்குப் புதிய வேளாண் தொழில் நுட்பங்கள், புதிய நெல் விதை அறிமுகம், மண்புழு உரம் தயாரித்தல் போன்றவற்றில் பயிற்சிகள் தரப்படுகின்றன.

இதுவரை இந்நிலையத்தின் அனைத்து விவரங்களையும் அறிந்திருப்பீர்கள், நீங்கள் அனைவரும் களைப்பாக உள்ளீர்கள். அங்கே தட்டுகளில் பழங்கள் உள்ளன. உண்டு இளைப்பாறுங்கள்.

(மாணவர்கள் அனைவரும் மகிழ்வுடன் பழங்களை உண்டனர்)

ஒவ்வொரு மாணவருக்கும் வீட்டில் வைத்து வளர்ப்பதற்குப் பழ மரக்கன்றுகள் வழங்கப்பட்டன. மாணவர்கள் ஆய்வாளருக்கு நன்றி கூறிப் பள்ளி வந்து சேர்ந்தனர்

### சொல்பொருள் :

இறைவை – நீர் இறைக்கும் கருவி
பசுந்தாள் – பசுமையான இலைதழைகள்
மானாவாரி – மழை பெய்தால் மட்டுமே பயிர் விளையும் நிலம்

## பயிற்சிகள்

### I. அ. வகுப்பறையில் பேசுக.

1. புதிய நெல் வகைகளைக் கண்டுபிடிக்க வேண்டியதன் அவசியம் என்ன ?
2. நீ எதிர்காலத்தில் வேளாண்மை ஆராய்ச்சியாளராகப் பணி செய்ய விரும்புகிறாயா ?
3. நீங்கள் சென்று வந்த களப்பயணம் பற்றி வகுப்பறையில் சிறு குழுவில் உரையாடுக, கருத்துப்படம் வரைக.

### ஆ. பிரித்து எழுதுக.

1. கிளையிலிருந்த – ______________________
2. பிரித்தெடுக்கும் – ______________________
3. மாங்கன்று – ______________________
4. பெயர்ப்பலகை – ______________________

### இ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. உவர்நிலம் என்பதன் பொருள்.
   (அ) உப்புத்தன்மை உள்ள நிலம் (ஆ) வளமான நிலம் (இ) பாலை நிலம்
2. கணித்தல் என்பதன் பொருள்.
   (அ) தொகுத்தல் (ஆ) கணக்கிடுதல் (இ) வரைதல்
3. உழவர்களின் நண்பன்.
   (அ) வெட்டுக்கிளி (ஆ) மண்புழு (இ) கோழி
4. குடில் என்பதன் பொருள்
   (அ) பெரியவீடு (ஆ) குடிசை வீடு (இ) அரண்மனை

### ஈ. கோடிட்ட இடத்தை நிரப்புக.

1. மாணவர்கள் களப்பயணமாக ____________ நிலையத்திற்குச் சென்றனர்.
2. ஆராய்ச்சி நிலையத்தினர் ____________________ நெல் வகைகளை அறிமுகப்படுத்தியுள்ளனர்.
3. வறட்சியைத் தாங்கி வளரக்கூடிய நெல் வகைகள் ________________
4. கேரள மாநிலத்தில் உள்ள __________________ ஆடுகள் அதிகமாகப் பால்தரக்கூடியவை.

### உ. சொற்றொடரில் அமைத்து எழுதுக.

1. வரவேற்று = ______________________________________
2. கண்டுபிடிப்பு = ______________________________________
3. சுவைமிக்க = ______________________________________

### ஊ. விடை எழுதுக.

1. நெல் ஆராய்ச்சி நிலையத்தின் பணிகள் இரண்டினை எழுதுக.
2. நெல் ஆராய்ச்சி நிலையங்கள் அமைந்துள்ள இடங்களின் பெயர்களை எழுதுக.
3. நெல்வகைகள் சிலவற்றின் பெயர்களை எழுதுக.
4. இன்றைய வேளாண்மையில் பயன்படுத்தப்படும் இயந்திரங்களின் பெயர்களை எழுதுக.
5. நீ சுற்றுலா சென்று வந்த இடத்தைப் பற்றிப் பத்து வரிகள் எழுதுக.

### II அ.மரபுத்தொடர் அறிவோம்.

மரபுத் தொடர், நேரடியாகப் பொருளை உணர்த்தாமல் வேறுபொருளை உணர்த்தி வரும்.

1. உண்மையை ஆணித்தரமாக எடுத்துரைக்க வேண்டும்.
2. பணம் இருக்கிறது என்பதற்காக அள்ளியிறைத்தல் கூடாது.
3. துன்பத்தில் உள்ளவர்களுக்கு நாம் தோள் கொடுக்க வேண்டும்.
4. யாரையும் நாம் மட்டந்தட்டிப் பேசக்கூடாது.
5. ஆடலரசு பள்ளிக்கு நேரமாகிவிட்டதால் அரக்கப்பறக்கச் சென்றான்.

### ஆ.பொருத்துக.

1. இடித்துரைத்தல் = புகழுடன் விளங்குதல்
2. ஏட்டுச் சுரைக்காய் = விடாப்பிடி
3. கரைத்துக்குடித்தல் = கண்டித்து அறிவுரைகூறுதல்
4. கொடி கட்டிப்பறத்தல் = நடைமுறைக்கு ஒவ்வாதது
5. குரங்குப்பிடி = முழுமையாகத் தெரிந்துகொள்ளல்

## இ. சொற்றொடரில் அமைத்து எழுதுக.

1. நகமும் சதையும் போல : ______________________
2. வாழையடி வாழையாக : ______________________
3. பஞ்சாய்ப் பறந்தனர் : ______________________

## ஈ. ஒவ்வொரு சொல்லாக இணைத்துச் சொற்றொடரை நீட்டுக.

(எ.கா) பூ.
செவ்வந்திப் பூ.
மஞ்சள் செவ்வந்திப் பூ.
அழகான மஞ்சள் செவ்வந்திப் பூ.
தோட்டத்தில் அழகான மஞ்சள் செவ்வந்திப் பூ.



______________________________________________

______________________________________________

______________________________________________

## உ. தொழிலாளர்களின் பெயர்களைக் கட்டத்திலிருந்து எடுத்து எழுதுக.

1. வீடு கட்டுபவர் ______________________.
2. மண்பாண்டம் வனைபவர் ______________________.
3. மர வேலை செய்பவர் ______________________.
4. உழவுத் தொழில் செய்பவர் ______________________.
5. போர்க்களத்தில் போரிடுபவர் ______________________.
6. மீன் பிடிப்பவர் ______________________.
7. மருத்துவ மனையில் நோயாளிக்கு உதவுபவர் ______________________.
8. பொன் நகை செய்பவர் ______________________.
9. கடிதங்களை உரிய இடத்தில் சேர்ப்பவர் ______________________.
10. பேருந்தில் பயணச்சீட்டுக் கொடுப்பவர் ______________________.

உழவர், மீனவர், படைவீரர், குயவர், நடத்துநர், கொத்தனார்,
தச்சர், பொற்கொல்லர், செவிலியர், அஞ்சல்காரர்

## ஊ.பொருந்தாத சொல்லை வட்டமிடுக.

1. தலை, கால், தோள், வாள்
2. குயில், மயில், முயல், காகம்
3. வீணை, தவில், பம்பை, மத்தளம்

### செயல்திட்டம்.

- உன் பெற்றோருடன் அருகில் உள்ள வேளாண்மை ஆய்வு மையம் / தொடர்வண்டி நிலையம் போன்ற இடங்களுக்குச் சென்று அவை பற்றிய விவரங்களை எழுதி வருக.

துணைப்பாடம்

# தன்னம்பிக்கைத் தாத்தா

'வேலங்குடி' என்னும் கிராமத்தில் போதுமான அளவு மழை பெய்வதில்லை. ஆதலால் குடிநீருக்குத் தட்டுப்பாடு. அக்கிராமத்திலிருந்து சற்றுத் தொலைவில் நெடிதுயர்ந்த நீண்ட மலைத்தொடர். அதன் மறுபக்கத்தில் வற்றாத ஆறு ஒன்று ஓடி, வீணாகக் கடலில் கலந்துகொண்டிருந்தது. அந்த ஆறு நம் ஊரின் அருகே ஓடினால் நன்றாக இருக்குமே என மக்கள் விரும்பினர்.

அவ்வூர் மக்கள் ஒன்று கூடினர். ஆற்று நீரைக் கொண்டு வர ஒவ்வொருவரும் ஒரு கருத்தைக் கூறினர்.



கூட்டத்திலிருந்த முதியவர் ஒருவர் "மலையைக் குடைந்து ஆற்றுநீரைக் கொண்டு வரலாம்" என்றார். முதியவரின் பேச்சைக் கேட்ட சிலர் "மலையைக் குடைதல் என்பது முடியாத வேலை" என்றனர். பலர், "முதியவர், இல்லாத ஊருக்கு வழி சொல்லுகிறார்" என்று ஏளனம் செய்தனர். ஆனால், அம்முதியவர் மட்டும் தமது கருத்தில் உறுதியாக இருந்தார்.

முதியவர் ஒருநாள் காலைப் பொழுதில் உளி, கடப்பாரை, கூடை ஆகியவற்றை எடுத்துக் கொண்டு மலையை அடைந்தார். சிற்றுளியால் மலையைக் குடையத் தொடங்கினார்.

இச்செயலைக் கண்டு அனைவரும் திகைத்தனர். "தள்ளாத வயதில் ஏன் இந்த வீண் வேலை? உங்களால் எப்படி இந்த வேலையைச் செய்து முடிக்க முடியும்?" என்று கேட்டனர்.

அதற்கு அம்முதியவர்... "உங்களுக்குத் துளிக்கூட நம்பிக்கை இல்லை. வெளியூர் சென்றுள்ள என் மகன் நாளை வருவான். அவனும் இம்மலையைக் குடையும் வேலையைச் செய்வான். அவனுக்குப் பிள்ளைகள் இருக்கிறார்கள். பிள்ளைகளுக்கும் பிள்ளைகள் பிறந்து கொண்டேயிருப்பார்கள். இதற்கு முடிவே இல்லை. ஆனால், இம்மலையால் மனிதர் போல வளர முடியாது.

ஆகையால், ஒருநாள் மலை முழுவதும் குடையப்பட்டுக் குகை வழியே ஆறு நமது கிராமத்திற்கு வரும் என்று முதியவர் கூறினார். முதியவரின் பேச்சு அங்கிருந்தவர்களின் மனத்தில் நம்பிக்கையைத் தோற்றுவித்தது. அனைவரும் நம்பிக்கையுடன் மலையைக் குடைந்தனர். ஆற்றுநீர் பெருக்கெடுத்து வந்தது.

இன்று, வேலங்குடி விளைச்சல் மிகுந்த வேளாண்குடியானது. முதியவர் மக்களால் 'தன்னம்பிக்கைத் தாத்தா' என அன்புடன் அழைக்கப்பட்டார்.

**சிந்திக்க.**

- மனிதர்களின் பலமே நம்பிக்கைதான்!
- நம்பிக்கை கொண்டு உழைத்தால் வெற்றி உறுதி.

## அறிந்துகொள்வோம்



1. நம் மாநிலத்திற்குரிய மரம் : பனை மரம்



2. நம் மாநிலத்திற்குரிய மலர் : செங்காந்தள் மலர்



3. நம் மாநிலத்திற்குரிய விலங்கு : வரையாடு



4. நம் மாநிலத்திற்குரிய பறவை : மணிப்புறா

# பகைவனுக்கு அருள்வாய்

பகைவனுக் கருள்வாய் – நன்னெஞ்சே!
பகைவனுக் கருள்வாய்!

புகை நடுவினில் தீயிருப்பதைப்
பூமியிற் கண்டோமே – நன்னெஞ்சே!
பூமியிற் கண்டோமே
பகை நடுவினில் அன்புரு வானநம்
பரமன் வாழ்கின்றான் – நன்னெஞ்சே!
பரமன் வாழ்கின்றான்



சிப்பியிலே நல்ல முத்து விளைந்திடுஞ்
செய்தி யறியாயோ? – நன்னெஞ்சே!
குப்பையிலே மலர்கொஞ்சுங் குருக்கத்திக்
கொடி வளராதோ? – நன்னெஞ்சே!

உள்ள நிறைவிலோர் கள்ளம் புகுந்திடில்
உள்ளம் நிறைவாமோ – நன்னெஞ்சே!
தெள்ளிய தேனிலோர் சிறிது நஞ்சையும்
சேர்த்தபின் தேனாமோ? – நன்னெஞ்சே!

வாழ்வை நினைத்தபின் தாழ்வை நினைப்பது
வாழ்வுக்கு நேராமோ? – நன்னெஞ்சே!
தாழ்வு பிறர்க்கெண்ணத் தானழிவான் என்ற
சாத்திரங் கேளாயோ? – நன்னெஞ்சே!

– மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

## சொல்பொருள் :

அருள் – இரக்கம்
குருக்கத்தி – மாதவிக் கொடி
தெள்ளிய – தெளிந்த
சாத்திரம் – அறநூல்கள்
கள்ளம் – வஞ்சனை



### பாடல்பொருள் :

நல்ல மனமே! பகைவன் இடத்திலும் அன்பு கொள்ள வேண்டும். எரிச்சல் ஊட்டும் புகை நடுவிலும் பயன் தரும் தீ இருக்கும். சிப்பிக்குள்ளும் நல்முத்து விளையும். குப்பையிலும் அழகான மலர்கள் பூத்துக் குலுங்கும் குருக்கத்திக் கொடி வளரும். பகைவனுக்குள்ளும் அன்பு கொண்ட இறைவன் வாழ்கிறான்.

சுவை மிக்க நல்ல தேனில் சிறிதளவு நஞ்சு கலந்து விட்டால், அந்தத் தேன் முழுவதும் நஞ்சாகி விடும். நிறைவான உள்ளம் இருப்பினும் அதில் வஞ்சக எண்ணம் கொண்டால் அவ்வுள்ளம் உயர்ந்த உள்ளமாக ஆகாது.

நிறைவான வாழ்வு வாழ வேண்டும் என்று விரும்புகிறபோது, பிறருக்குத் தீங்கு நினைத்தால் அவ்வாழ்வு நிறைவான வாழ்வாக இருக்க இயலாது. பிறருக்குத் தீங்கு செய்ய நினைத்தால், அத்தீங்கு தனக்கே வந்து சேரும் என்று சாத்திரங்கள் கூறுவதை கேட்டதில்லையா? ஆகவே நல்ல மனமே, 'நீ பகைவனுக்கும் அருள் செய்ய வேண்டும்'.

## பயிற்சிகள்

### அ. வகுப்பறையில் பேசுக.

1. உன்னிடம் சண்டையிடும் நண்பனுக்கு உதவி செய்துள்ளாயா ? எப்படி ?

### ஆ. பிரித்து எழுதுக.

1. நன்னெஞ்சே – ______________
2. அன்புருவான – ______________
3. செய்தியறியாயோ – ______________
4. தீயிருப்பதை – ______________

### இ. சேர்த்து எழுதுக.

1. பூமியில் + கண்டோம் – ______________
2. பிறர்க்கு + எண்ண – ______________
3. தான் + அழிவான் – ______________
4. நிறைவு + இலார் – ______________

### ஈ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. புகை நடுவினில்__________இருப்பதைப் பூமியில் கண்டோம்.
   (அ) தீ (ஆ) காற்று (இ) தூசு
2. சிப்பியிலே விளைவது______________
   (அ) பவளம் (ஆ) முத்து (இ) பாசி
3. உள்ளம் தூய்மையாக இருக்க________யைப் புகுத்தக் கூடாது.
   (அ) வஞ்சனை (ஆ) உண்மை (இ) நன்மை

### உ. விடை எழுதுக.

1. பிறருக்குத் தீங்கு எண்ணக்கூடாது. ஏன் ?
2. இப்பாடல் மூலம் அனைவருக்கும் பாரதியார் கூறும் கருத்துகள் யாவை?

உரைநடை

# போரைத் தடுத்த புலவர்

## (நாடகம்)

முன்னொரு காலத்தில் சோழநாடு இரு பிரிவுகளாக இருந்தது. கருவூர்ப்பகுதியை நலங்கிள்ளியும், உறையூர்ப் பகுதியை நெடுங்கிள்ளியும் ஆட்சி செய்து வந்தனர். இருவரும் உறவினர்கள்.

இவர்களுக்குள் தீராப்பகை. இதனால், அங்கே அடிக்கடி போர் மூளும் சூழல் ஏற்பட்டது. இருநாட்டு மக்களும் சொல்லொணாத் துயரத்திற்கு ஆளாயினர். ஒற்றர், பகைவர் என்று குற்றம் சாட்டப்பட்டுப் பலர் சிறையில் அடைக்கப்பட்டனர். புலவர் இளந்தத்தனாரும் இக்குற்றச்சாட்டுக்கு ஆளாகி உறையூர்ச் சிறையில் அடைக்கப்பட்டார். இதைக் கேள்விப்பட்டுக் கோவூர்கிழார் சினத்துடன் உறையூர் அரண்மனைக்கு வருகிறார்.

### காட்சி – 1

இடம் : உறையூர் அரண்மனையின் அரசவை

நாடக மாந்தர்கள் : கோவூர்கிழார், நெடுங்கிள்ளி

**நெடுங்கிள்ளி :** சோழ நாட்டின் புலவரேறே! வருக !வருக ! உம் வரவு நல்வரவாகுக.



கோவூர்கிழார் : ( கோபத்துடன் ) ஆன்றோரும் சான்றோரும் புகழ்ந்து போற்றும் அறங்காக்கும் உறையூரிலா இந்த அவலம்! அறியாமற் செய்தனையோ ? இல்லை அறிந்தே செய்தனையோ ? நீ ஒரு காவலன் என்பதையும் மறந்தனையோ ?

நெடுங்கிள்ளி : கோவூர் தந்த புலவர் தலைவ! தாங்கள் என்மீது கொண்ட சினத்திற்குக் காரணம் யாதோ ?

கோவூர்கிழார் : உன்னைப் பாடிப் பரிசில் பெற வந்த, எம் ஆருயிர் நண்பர் புலவர் இளந்தத்தனார் எங்கே ? அவரை என்ன செய்தாய் ?

நெடுங்கிள்ளி : ( ஏளனமாக ) ஓ! இளந்தத்தனா! பகைவன் நலங்கிள்ளியின் ஒற்றர் அல்லவா! பகை நாட்டு ஒற்றருக்கு என்ன மரியாதை தர வேண்டுமோ அதைக் கொடுத்திருக்கிறேன். ஒற்றரைத் தண்டிப்பதில் தவறேதுமில்லையே!

கோவூர்கிழார் : கொற்றவனே! என் செய்தனை! புலவரை ஒற்றர் எனக்கருதிச் சிறையிட்டனையே! இஃது உமது குடிப்பெருமைக்கு ஏற்றதன்று. புலவர்களின் பரிசில் வாழ்க்கையை நீவிர் அறியீரோ ? பழமரத்தை நாடிச் செல்லும் பறவைகள் போல, வள்ளன்மை உடையோரை நாளும் சென்றடைந்து, பாடிப் பரிசில் பெறும் வாழ்க்கையல்லவா புலவர்களது வாழ்க்கை. புலவர்கள் தாம் பெற்ற பரிசில் பொருள்களைத் தாம் மட்டும் துய்க்காது, உற்றார், உறவினர் மட்டுமல்லாது வறியோர்க்கும் எளியோர்க்கும் வழங்கி மகிழ்வர்.

நாடுகளுக்கு இடையே ஒற்றுமை ஏற்பட வழி வகுப்பர்; நாட்டில் காணப்படும் குறைகளை அரசர்களுக்கு எடுத்துச் சொல்வர்; அரசனிடம் காணப்படும் குறைகளைச் சுட்டிக்காட்டித் திருத்துவர். இவற்றை நீ அறியாயோ ? புலவர்கள் எந்நாட்டவர்க்கும் சொந்தமானவர்கள். அறிவுரை கூறுதலும், அறம் காத்தலும் புலவர்களின் தொழில் என்பதையும் மறந்தனையோ! இத்தன்மை வாய்ந்த புலவர் இளந்தத்தனார், 'ஒற்றரா ? பகைவரா ?' சிந்தித்துப்பார்.

நெடுங்கிள்ளி : இளந்தத்தனார் புலவரா ? அந்தோ! என் அறியாமையால் பெரும் பிழை செய்து விட்டேன்! மன்னிக்க வேண்டும். இப்பொழுதே இளந்தத்தனாரை விடுவிக்கிறேன்.

(காவலர்கள் இளந்தத்தனாரை விடுதலை செய்து அழைத்து வருதல்)

நெடுங்கிள்ளி : அறிவிற் சிறந்த புலவரே! வாயிற் காவலர் கூற்றை 'மெய்' என்று நம்பி ஆராய்ந்து பார்க்காமல் செய்த தவறிது. தக்க நேரத்தில் கோவூரார் அறிவுறுத்தினார்; பிழை உணர்ந்தேன். பொறுத்தருள்க!

இளந்தத்தனார் : மன்னர் பெருமானே! தங்கள் நிலை அறிந்தேன். உறையூர் வேந்தன் புலவர்க்கு அநீதி இழைத்தான் என்ற பழிச்சொல் நீங்கியது.

நெடுங்கிள்ளி : புலவர் பெருமக்களே! இன்னாத செய்த என்னையும், வாழ்த்தும் உங்களை என்றும் மறவேன். சான்றோர், என்றும் சான்றாண்மை உடையவர் என்பதை உங்களால் அறிந்தேன். இதோ இந்தப் பொன்னும் பொருளும் உம்மைச் சார்ந்ததே! பெற்றுக்கொள்வீர். நீவிர் இருவரும் சில காலம் எம் விருந்தினராய்த் தங்கியிருந்து எம்மைப் பெருமைப்படுத்திட வேண்டும்.

(வேந்தனின் வேண்டுகோளை ஏற்று, விருந்தினராய்ச் சிலகாலம் அரண்மனையில் தங்கியிருந்தனர்; தாம் பெற்ற பரிசில் பொருள்களோடு தங்கள் இல்லம் திரும்பினர்.)

## காட்சி – 2

இடம் : மன்னன் நெடுங்கிள்ளி அரசவை

நாடக மாந்தர்கள் : மன்னன் நெடுங்கிள்ளி, ஒற்றர் தலைவன், தலைமை அமைச்சர், படைத்தளபதி.

(மன்னன் நெடுங்கிள்ளி அரசவையில் அமைச்சர் முதலானவர்களுடன் இருக்கிறார் அப்போது.......)

ஒற்றர் தலைவன் : ( ஓடோடி வந்து ... ) மன்னாதி மன்னா! அவசரச் செய்தி ! கருவூரின் படைகள் நம் உறையூரை முற்றுகையிட விரைந்து வருகின்றன.

நெடுங்கிள்ளி : ஓ! நலங்கிள்ளி படையெடுத்து வருகிறானா ? வரட்டும். போரில் முதுகிட்டு ஓடச் செய்கிறேன். அமைச்சரே! ஒலிக்கட்டும் போர் முரசு! நால்வகைப் படைகளும் போர்க்களம் நோக்கிப் புறப்படட்டும்.

அமைச்சர் : பேரரசே! போர்க்களம் நமக்குப் புதிதன்று! நமது படைவீரர்கள் வலிய நெஞ்சுரம் மிக்கவர்கள்.

படைத்தளபதி : வாளுக்கும் வேலுக்கும் அஞ்சாத நம் படை வீரர்கள் எதிரிகளை எளிதில் வெற்றி கொள்வர். வெற்றி நமதே!

( நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் போர் புரியப் போவதை அறிந்த கோவூர்கிழார் மிகுந்த வருத்தம் அடைந்தார். எவ்வாறேனும் போரை நிறுத்த வேண்டும் என உறுதிகொண்டார். நெடுங்கிள்ளியின் போர்ப் பாசறையை நோக்கிச்சென்றார்.)

காட்சி –3

இடம் : நெடுங்கிள்ளியின் போர்ப் பாசறை

நாடக மாந்தர்கள்: கோவூர்கிழார், நெடுங்கிள்ளி

நெடுங்கிள்ளி : அறிவுசால் புலவரே! போர் முனையில் தங்களின் வருகை வியப்பளிக்கிறது!

கோவூர்கிழார் : இதிலென்ன வியப்பு ?உங்கள் இருவரின் பகையைக் கண்டுதான் உலகமே வியக்கிறதே! சோழநாடு பொன் விளையும் பூமி அல்லவா ? உட்பூசலால் உங்கள் நாட்டினைப் பகைவர் கவரும் நிலை உள்ளது என்பதைத் தாங்கள் அறிவீரா ?

நெடுங்கிள்ளி : இது என்ன புதுக்கதை!

கோவூர்கிழார் : கதையன்று! உண்மை! பெருவலி படைத்த பெருந்தகையீரே! உங்கள் நால்வகைப் படைகளின் வீரத்தை நானிலமே அறியும். ஆனாலும் இப்போரினால் துயரப்படப்போவது யார் ? உங்களுக்குள் பகை வேண்டா. பகையால் நாடும் நாட்டு மக்களும் அடையும் துயர் சொல்லில் அடங்காது அயலவர் படையெடுத்தால் உங்கள் நிலை என்ன ? சிந்தீப்பீர். வேற்றுமையை வேரறுத்து, ஒற்றுமைக்கு உரமளிப்பீர். ஒற்றுமையால் உங்கள் இருவரின் வலிமை கூடுமன்றோ! போரைத் தவிர்த்திடுக. நலங்கிள்ளியும் உணர்வான், அவனிடம் நானே நேரில் செல்கிறேன்;

நெடுங்கிள்ளி : பண்புடைச் சான்றீர்! நீவிர் கூறுவது முற்றிலும் உண்மை. மனம் வருந்துகிறேன். இதை நலங்கிள்ளியும் உணர வேண்டுமே !

கோவூர்கிழார் :
உண்மை நிலையை எடுத்துரைக்கிறேன்; அதுவரை பொறுத்திரு. ( கோவூர்கிழார் நலங்கிள்ளியிடம் செல்கிறார்)

## காட்சி – 4

இடம் : நலங்கிள்ளியின் போர்ப்பாசறை

நாடகமாந்தர்கள் : நலங்கிள்ளி, கோவூர்கிழார்,நெடுங்கிள்ளி, படைவீரர்கள்.

( கோவூர்கிழார் வருவதைப்பார்த்து.... )

நலங்கிள்ளி : சோழர் குலப் புலவரே ! பொய்யா நாவின் புலமைச் சான்றீரே ! வருக! வருக! தங்களின் அறிவுரையை மதித்து நெடுங்கிள்ளி இளந்தத்தனாரை விடுவித்தான் என அறிந்தேன். சோழர்குடிக்கு ஏற்படவிருந்த பெரும் பழி நீங்கியது.



கோவூர்கிழார் : நலங்கிள்ளி! அதைவிடப் பெரும்பழி உன்னால் சோழர்குடிக்கு வரப்போகிறதோ என அஞ்சுகிறேன். போர்க்களத்தில் நீ இப்பொழுது எதிர்த்து நிற்கிறாயே, யாரை? விற்கொடி கொண்ட சேரனா? மீன்கொடி கொண்ட பாண்டியனா? இல்லையே ! நெடுங்கிள்ளி உன் குடிப்பிறந்தவன். நீங்கள் இருவருமே சோழர்கள். உங்கள் இருவரில் எவர் தோற்றாலும் 'சோழன் தோற்றான்!' என்றுதான் கூறுவார்கள். இந்தப் பழியானது சோழர் குலத்தைத்தானே சாரும். உங்களுக்குள் இப்பகை தேவையா?

நலங்கிள்ளி : புலமைச் செல்வரே ! உங்கள் கூற்றில் உண்மை இருக்கிறது. இதை நெடுங்கிள்ளியும் உணர்வானா?

கோவூர்கிழார் : உன் இளவல் நெடுங்கிள்ளி தவற்றை உணர்ந்தான். இதுநாள்வரை இருந்துவந்த பகைக்கு வருந்துகிறான். உன் நட்பை விரும்புகிறான். உன்னைப் பார்க்கத் துடிக்கிறான். (சற்றுத் தொலைவில் நெடுங்கிள்ளி வருவதைப்பார்த்தல்....) அதோ வருகிறான் நெடுங்கிள்ளி.

நலங்கிள்ளி : (கண்ணீர் மல்க) தம்பி..!

(நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும் கண்ணீர் மல்க ஆரத் தழுவிக்கொள்கின்றனர்)

நெடுங்கிள்ளி : என் முன்னவ! என்னைப் பொறுத்தருள வேண்டும். அறியாமையால் பெரும்பகை வளர்த்தேன். கோவூர்கிழாரின் அறிவுரையால் அறிவுத் தெளிவு பெற்றேன். இனி நமக்குள் எந்நாளும் போரில்லை, பகையில்லை. இரு நாடும் ஒரு நாடு ஆகட்டும். ஆட்சிப் பொறுப்பை முன்னவன் நீ ஏற்று அரியணையில் அமர வேண்டும்.

நலங்கிள்ளி : இளவலே! காலம் தாழ்த்தியாவது நின் மனம் மாறியது கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். நடந்ததை மறப்போம்! நல்லதை நினைப்போம்! ஆட்சிப் பொறுப்பில் நீயும் உறுதுணையாய் இருக்க வேண்டும். தக்க காலத்தில் நம் இருவருக்கும் அறிவுரை வழங்கி ஒற்றுமைப்படுத்திய கோவூர்கிழாரை வாழ்த்துவோம்!

படைவீரர்கள் : கோவூர்கிழார் வாழ்க! போரைத் தடுத்த புலவர் வாழ்க! சோழர் குலம் வாழ்க! வாழ்க!

## சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| மூளும் | – | உருவாகும் |
| அவலம் | – | துன்பம் |
| ஒற்றன் | – | உளவாளி |
| முற்றுகை | – | சுற்றி வளைத்தல் |
| நெஞ்சுரம் | – | மனவலிமை |
| கொற்றவன் | – | அரசன் |

## பயிற்சிகள்

### I.அ. வகுப்பறையில் பேசுக.

1. இந்நாடகத்தைப் பள்ளி ஆண்டு விழாவில் நடித்துக் காட்டுக.
2. நீ நெடுங்கிள்ளியாக இருந்திருந்தால் போர் செய்திருப்பாயா ? போரை நிறுத்தியிருப்பாயா ? காரணம் கூறுக.

### ஆ. பிரித்து எழுதுக.

1. அறங்காக்கும் – ______________
2. தவறேதும் – ______________
3. ஏற்றதன்று – ______________
4. எந்நாட்டவர்க்கும் – ______________
5. புதிதன்று – ______________

### இ. சேர்த்து எழுதுக.

1. நான்கு + நிலம் – ______________
2. சிறை + இட்டனையே – ______________
3. பொறுத்து + அருள்க – ______________
4. உள் + பூசல் – ______________
5. தவறு + இது – ______________

### ஈ. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

1. இளந்தத்தனார் மீது சாற்றப்பட்ட குற்றம்

   (அ) ஒற்றர் (ஆ) தீயவர் (இ) அயல்நாட்டவர்

2. நெடுங்கிள்ளி போர்க்களம் நோக்கிப் புறப்படட்டும் என்று கூறியபடைகளின் வகைகள்.

   (அ) மூன்று (ஆ) நான்கு (இ) ஐந்து

3. நலங்கிள்ளியின் படையெடுப்பை நெடுங்கிள்ளியிடம் கூறியவர்

   (அ) படைவீரர் (ஆ) ஒற்றர் (இ) புலவர்

## உ. விடை எழுதுக.

1. புலவர் இளந்தத்தனார் யாரால், எதற்காகச் சிறையில் அடைக்கப்பட்டார் ?
2. புலவர்களின் வாழ்க்கையைப் பற்றிக் கோவூர்கிழார் கூறியவை யாவை ?
3. நெடுங்கிள்ளி இளந்தத்தனாரிடம் கூறியவை யாவை ?
4. போரை நிறுத்தக் கோவூர்கிழார் கூறிய காரணம் என்ன ?

## II. அ. அறிந்து கொள்க.

| | | | |
|---|---|---|---|
| 1. | மூவேந்தர் | : | சேரர், சோழர், பாண்டியர் |
| 2. | சேரர்களின் மாலை | : | பனம்பூ மாலை |
| | சோழர்களின் மாலை | : | ஆத்திப் பூ மாலை |
| | பாண்டியர்களின் மாலை | : | வேப்பம்பூ மாலை |
| 3. | நால்வகைப் படைகள் | : | காலாட்படை, குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை. |

## ஆ. கொடுக்கப்பட்டுள்ள செய்தியைப் படிக்க. உரிய விடையைத் தேர்ந்தெடுத்து எழுதுக.

'பெரியார்' என்னும் சிறப்புச்சொல் இன்று ஈ.வெ.ரா.இராமசாமியைக் குறிக்கும். இவர் 1879ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் நாள் ஈரோடு நகரில் பிறந்தார். இவருடைய தந்தை வெங்கடப்பர், தாயார் சின்னத்தாயம்மாள். இவருக்குப் பெற்றோர் இட்டபெயர் இராமசாமி என்பதாகும். ஈ.வெ.ரா. சிறுவனாக இருக்கும் போதே புராண, இதிகாசங்கள் பற்றி பண்டிதர்களுடன் வாதிடுவார்.

சமுதாய ஏற்றத்தாழ்வை அகற்றல், மூடநம்பிக்கையை ஒழித்தல், ஒடுக்கப்பட்ட மக்களை முன்னேற்றுதல், தீண்டாமை ஒழித்தல், பெண்கல்வி, நலிந்தோர்க்கு அரசு உதவி போன்ற பல சீர்திருத்தங்களுக்காகப் பாடுபட்டார். இவர் 'பகுத்தறிவுப் பகலவன்' என அனைவராலும் போற்றப்பட்டார்.

1. சிறுவயதில் பண்டிதர்களுடன் பெரியார் இதைப்பற்றி வாதிடுவார்.

   (அ) இதிகாசங்கள் (ஆ) சங்க இலக்கியங்கள் (இ) புதுக்கவிதை

2. பெரியாருக்குப் பெற்றோர் இட்ட பெயர்.

   (அ) கந்தசாமி (ஆ) இராமசாமி (இ) முத்துச்சாமி

## இ. அட்டவணையைப் படித்து வினாக்களுக்கு உரிய விடையளிக்க.

| போட்டிகள் பங்கேற்போர் | கவிதை | கட்டுரை | பேச்சு | ஓவியம் | தனிநடிப்பு |
|---|---|---|---|---|---|
| யாழினி | முதல் இடம் | பங்கேற்பு | பங்கேற்பு | இரண்டாம் இடம் | — |
| எழிலரசன் | பங்கேற்பு | முதல் இடம் | மூன்றாம் இடம் | பங்கேற்பு | மூன்றாம் இடம் |
| பாவை | இரண்டாம் இடம் | பங்கேற்பு | — | முதல் இடம் | பங்கேற்பு |
| அறிவுநம்பி | மூன்றாம் இடம் | இரண்டாம் இடம் | இரண்டாம் இடம் | — | இரண்டாம் இடம் |
| கபிலன் | பங்கேற்பு | மூன்றாம் இடம் | முதல் இடம் | மூன்றாம் இடம் | முதல் இடம் |

1. பேச்சுப் போட்டியில் முதல் இடம் பெற்றவர்
   (அ) யாழினி (ஆ) கபிலன் (இ) அறிவுநம்பி
2. மூன்று போட்டிகளில் இரண்டாமிடம் பெற்றவர்
   (அ) பாவை (ஆ) அறிவுநம்பி (இ) எழிலரசன்
3. கட்டுரைப் போட்டியில் முதல் இடம் பெற்றவர்
   (அ) எழிலரசன் (ஆ) பாவை (இ) கபிலன்
4. அனைத்துப் போட்டிகளிலும் பங்கு பெற்றவர்கள்
   (அ) பாவை, யாழினி (ஆ) எழிலரசன், கபிலன் (இ) அறிவுநம்பி, யாழினி
5. ஓவியப் போட்டியில் மூன்றாம் இடம் பெற்றவர்
   (அ) பாவை (ஆ) கபிலன் (இ) யாழினி

## ஈ. சொற்றொடர் அமைப்பு முறை அறிக.

இளமதி பாடல் பாடினாள்

இத்தொடரில் இளமதி என்ன செய்தாள்? – பாடினாள்.

இதில் பாடினாள் என்பது வினாவுக்கு விடையாக வரும் சொல். இது பாடுதலாகிய செயல், அதாவது வினையைக் குறிக்கும்.

ஒரு தொடரில் அமைந்துள்ள வினையையே அதாவது வினைமுற்றையே பயனிலை என்கிறோம்.

பாடலைப் பாடியவர் யார் ? – இளமதி

யார் ? என்னும் வினாவுக்கு விடையாக வரும் (இளமதி) சொல்லே எழுவாய்.

ஒரு தொடரில் யார், எது, எவை என்னும் வினாவுக்கு விடையாக வரும் சொல்லே எழுவாய். (எழுவாய் எப்போதும் பெயர்ச் சொல்லாகவே இருக்கும்).

இளமதி எதைப் பாடினாள் ? – பாடல்

எதை ? என்னும் வினாவிற்கு விடையாக வரும் ( பாடல் ) சொல்லே செயப்படுபொருள் ஆகும்.

ஒரு தொடரில் யாரை, எதை, எவற்றை என்னும் வினாவுக்கு விடையாக வரும் சொல்லே செயப்படுபொருள்.

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் ஒரு தொடரில் இடம்பெற்றிருக்கும்.

பாடல் பாடினாள் – இத்தொடரில் எழுவாய் இல்லை.
இளமதி பாடினாள் – இத்தொடரில் செயப்படுபொருள் இல்லை.

ஒரு தொடர், எழுவாய் அல்லது செயப்படுபொருள் இல்லாமலும் அமையலாம். ஆனால், பயனிலை இடம்பெற்றிருக்கும்.

உ. எழுவாய், செயப்படுபொருள், பயனிலைகளை எடுத்து எழுதுக.

1. மணிமேகலை நடனம் ஆடினாள்.
2. திருவள்ளுவர் திருக்குறளை இயற்றினார்.
3. அழகன் தோட்டத்திற்குச் சென்றார்.
4. பொன்மலர் விண்மீன்களை எண்ணினாள்.

| வ.எண் | எழுவாய் (யார், எது, எவை) | செயப்படுபொருள் (யாரை, எதை, எவற்றை) | பயனிலை ( முடிந்தசெயல் ) |
|---|---|---|---|
| 1. | | | |
| 2. | | | |
| 3. | | | |
| 4. | | | |

**செயல்திட்டம்.**

➤ கையெழுத்து இதழுக்குத் தேவையான நகைச்சுவை நாடகம், இலக்கிய நாடகம், வரலாற்று நாடகங்கள் தொகுப்புத் தயாரிக்க.

துணைப்பாடம்

## உழைப்பே வாழ்வு!

மாங்குடி என்னும் ஊரில் உழவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவ்வூரில் அவருக்குச் சொந்தமாகச் சிறிது நிலம் இருந்தது. அவர் அதில் பயிர்கள் விளைவித்து, அதில் வரும் வருமானத்தைக் கொண்டு குடும்பத்தை நடத்தி வந்தார். அவருக்கு ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் மாறன். அவன் எந்தத் தொழிலையும் கற்றுக்கொள்ளாமல் சோம்பித் திரிந்து வந்தான். உழவர் தன் மகனின் எதிர்கால வாழ்வை எண்ணிக் கவலை அடைந்தார்.

உழவர் தன் மகனிடம் எவ்வளவோ அறிவுரை சொல்லிப் பார்த்தார். மாறன் எதற்கும் செவி சாய்க்கவில்லை. நாள்கள் உருண்டோடின. உழவருக்கு வயதாகிவிட்டது. உடல் நலம் குன்றியது. அவர் படுத்த படுக்கையானார். அதனால், வீட்டில் வருமானம் குறைந்து வறுமை ஏற்பட்டது. அப்பொழுதும் மாறன் மனந்திருந்தவில்லை.



ஒருநாள் உழவர் தம் மகனை அழைத்தார். “மாறா, எனக்கு உடல்நிலை சரியில்லை. நாளுக்குநாள் உடல்நிலை மோசமடைந்து வருகிறது. உன்னைப் பற்றிக் கவலையாக உள்ளது. இருந்தாலும் உனக்கு நல்ல எதிர்காலம் இருக்கின்றது. நமது நிலத்தில் புதையல் இருக்கிறது என்று, என்னுடைய பாட்டனார் கூறியிருக்கிறார். நீ அதை எடுத்துக்கொண்டு நன்றாக வாழ்” என்று உழவர் கூறினார்.

மாறன், புதையலை எடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் மண்வெட்டியும் கடப்பாரையும் கொண்டு நிலத்தைத் தோண்டினான். ஆனால், புதையல் கிடைக்கவில்லை. இருந்தாலும் புதையல் கிடைக்கும் என்ற ஆசையால் அவன் முயற்சியைக் கைவிடவில்லை. நிலத்தை அங்குலம் அங்குலமாகத் தோண்டிப் பார்த்தான். அப்பொழுதும் புதையல் கிடைக்கவில்லை. ஆனால், நிலம் நன்றாகப் புழுதியானது. மாறன் நிலத்தில் சோர்ந்து உட்கார்ந்து விட்டான். அப்போது அவ்வழியே சென்ற ஊர்ப்பெரியவர், “மாறா!, புதையல் கிடைக்கவில்லை என்று சோர்ந்து விடாதே, உன்னுடைய நிலம் இப்போது நன்றாகப் புழுதியாயிருக்கின்றது. அதில் சில பூசணி விதைகளை ஊன்றிவை, நன்றாகக் காய் காய்க்கும்” என்று கூறினார்.

பெரியவர் கூறியவாறே மாறன் சில பூசணி விதைகளை நிலத்தில் ஊன்றினான்; நீரூற்றினான். என்ன வியப்பு! பூசணிக்காய்கள் விளைந்து மலைபோலக் குவிந்தன. மாறன் அவற்றை நல்ல விலைக்கு விற்றான்; கைநிறையப் பணத்தைப் பெற்றான். அப்போது தந்தை கூறியது அவன் நினைவுக்கு வந்தது.

“ஓகோ! தந்தை கூறிய புதையல் இதுதான்” என்று கூறி மகிழ்ந்தான். அதன்பிறகு நிலத்தில் உழைத்து வாழ்வில் முன்னேறினான்.

‘உழைப்பே வாழ்வு’ என்பதை உணர்ந்தான்.

### சிந்திக்க.

- மாறனைத் திருத்த அவன் அப்பா, நிலத்தில் புதையல் இருப்பதாகக் கூறியது பற்றி நீ என்ன நினைக்கிறாய்?
- மாறனைத் திருத்த அவன் அப்பா, வேறு என்னென்ன வழி முறைகளைப் பின்பற்றி இருக்கலாம்? சிறு குழுவில் விவாதிக்க.

# கனவு தந்த தீர்ப்பு

## ( கதைப் பாடல் )

பொன்னன் வீட்டு மாடியிலே
பொந்து ஒன்று இருந்ததுவே
சின்னக் குருவிகள் இரண்டுவந்தே
சீராய் அதிலே தங்கினவே.



அந்தக் குருவிகளுடன் இரண்டு
அன்புக் குருவிக் குஞ்சுகளும்
சிந்தைக் கின்பம் தந்திடவே
சிறப்பாய்த் தோன்றி வாழ்ந்தனவே.

குருவிகள் தமது கூட்டினிலே
கூடிக் கீச்சுக் கீச்செனவே
பெருகும் சத்தம் போடுவது
பிடிக்க வில்லை அவனுக்கே.



தந்தைக் குருவி தாய்க்குருவி
தாம் இல்லாத சமயத்தில்
அந்தப் பொந்தை அச்சிறுவன்
அட்டை ஒன்றால் மூடிவிட்டான்.



குருவிகள் இரண்டும் வந்தனவே
கூக்குர லிட்டுக் கதறினவே
பரிவு ஒன்றும் இல்லாமல்
படுக்கப் போனான் அச்சிறுவன்.

இரவில் பொன்னன் தூங்குகையில்
இரண்டு குருவியும் கனவினிலே
அருவி போல ஓவென்றே
அலறி அலறி அழுதனவே!

உன்னை இப்படி ஓர்அறையில்
ஒருவர் பூட்டி வைத்தால்நீ
என்ன செய்வாய் என்பதையே
எண்ணிப் பார்க்க வேண்டாவோ ?

பொன்னன் கனவில் குருவிகளின்
புலம்பல் கேட்டு மனமுருகி
மின்னல் போல விரைந்தோடி
மூடிய அட்டையை எடுத்தெறிந்தான்.

துன்பம் அடைந்த குருவிகளும்
இன்பம் கொண்டே முன்போலே
பொன்னன் வீட்டில் நலமாகப்
பூரிப் புடனே வாழ்ந்தனவே.

– புலவர் தணிகை உலகநாதன்.

## சொல்பொருள் :

| | | |
|---|---|---|
| சீராய் | – | சிறப்பாய் |
| சிந்தை | – | உள்ளம் |
| பெருகுதல் | – | மிகுதல் |
| கூக்குரல் | – | அலறல் |
| பரிவு | – | அன்பு |
| புலம்பல் | – | வருந்துதல் |
| மனமுருகி | – | உள்ளம் நெகிழ்ந்து |
| பூரிப்பு | – | மகிழ்ச்சி |

## ஆசிரியர் குறிப்பு :



**பெயர்** .. தணிகை உலகநாதன்

**ஊர்** .. திருவத்திபுரம், வேலூர் மாவட்டம்

**பெற்றோர்** .. தா. தணிகாசலம்
சுந்தரம் அம்மையார்

**இயற்றிய நூல்கள்** .. பூஞ்சோலை, தேன் சுவைக் கதைகள், பாடும் பாப்பா, மாணவர் தமிழ் விருந்து, சிறுவர் நாடக விருந்து இன்னும் பிற நூல்கள்.

**காலம்** .. 01.10.1921 முதல்
19.11.1993 வரை

**சிறப்பு விருது** .. 1974–இல் தமிழக அரசின் 'நல்லாசிரியர் விருது'.

## பயிற்சிகள்

### அ. வகுப்பறையில் பேசுக.

1. பொன்னன் செய்த செயல்கள் பற்றிய கருத்தைச் சிறுகுழுவில் கலந்துரையாடுக.

### ஆ. பிரித்து எழுதுக.

1. சிந்தைக்கின்பம் = ______________________
2. கூக்குரலிட்டு = ______________________
3. மனமுருகி = ______________________
4. விரைந்தோடி = ______________________
5. எடுத்தெறிந்தான் = ______________________

## இ. விடை எழுதுக.

1. குருவிகள் எங்கு வாழ்ந்தன ?
2. பொன்னன் குருவிகளை வெறுக்கக் காரணம் என்ன ?
3. சிறுவன் பொந்தை எப்போது அடைத்தான் ?
4. சிறுவனின் கனவில் குருவிகள் கூறியதென்ன ?
5. கனவு கண்ட சிறுவன் என்ன செய்தான் ?

## II. அ. படைப்பாற்றல் திறன்.

நீ விரும்பும் பறவை அல்லது விலங்கு பற்றி ஐந்து வரிகள் எழுதுக.

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

## ஆ. ஒரு கதையின் முதல் தொடர் கொடுக்கப்பட்டுள்ளது. நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு தொடர் கூறிக் கதையை நிறைவு செய்க.

நிலவழகன் புத்தகத்தை எடுத்தான்.

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

______________________________

## இ. சொற்களை இடம் மாற்றிச் சரியான தொடரை உருவாக்குக.

1. மலரும் மல்லிகை இரவில் ______________________
2. உதவாது ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு ______________________
3. மலர்கள் வெண்மையான இரவில் மலரும் ______________________
4. மதுரை வான்மதி சென்றாள் ______________________
5. கோலம் சிறுமியர் போட்டனர் ______________________

உரைநடை

## அறிவு வளர்ச்சியில் கலைக்களஞ்சியம்!

ஒரு சொல்லுக்குப் பொருள் தெரிந்து கொள்ள அகரமுதலியைப் பார்க்கிறோம். அச்சொல்லைப்பற்றி மேலும் விவரங்களைத் தெரிந்து கொள்ள நாம் கலைக்களஞ்சியம் என்னும் நூலைப் பார்க்க வேண்டும்.

களஞ்சியம் என்பது தானியங்களைச் சேகரித்து வைக்கும் இடமாகும். குழந்தைகள் கலைக்களஞ்சியம் என்பது குழந்தைகளுக்குத் தேவையான பல்வேறு செய்திகளை ஒருங்கே சேர்த்து வைக்கப்பட்டுள்ள நூலாகும். கலைக்களஞ்சியத்தைப் பயன்படுத்துவதால் குழந்தைகள் விரைவான அறிவுவளர்ச்சியும் மொழி வளர்ச்சியும் அடைவர்.

குழந்தைகள் கலைக்களஞ்சியம் குழந்தைகள் தாமே படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக அமைந்திருக்கும். இது பத்துத் தொகுதிகளைக் கொண்டுள்ளது. பத்தாவது தொகுதியின் இறுதியில் சொற்களின் அகர வரிசைப்பட்டியல் கொடுக்கப்பட்டிருக்கும். நாம் அறிந்து கொள்ள விரும்பும் சொல் அப்பட்டியலில் எங்கு உள்ளது என்று முதலில் கண்டுபிடிக்க வேண்டும். அச்சொல்லைத் தொடர்ந்து இரு எண்கள் கொடுக்கப்பட்டிருக்கும். முதல் எண் தொகுதியையும் இரண்டாவது எண் பக்கத்தையும் குறிக்கும்.

எடுத்துக்காட்டாகப் பட்டியலில் குயில்:4–1 என்று குறிக்கப்பட்டிருக்கும். நாம் நான்காம் தொகுதியை எடுத்து முதலாவது பக்கத்தைப் புரட்டிப் பார்த்தால், குயில் என்னும் சொல்லும் அது தொடர்பான செய்திகளும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

இப்பாடப் பகுதியில் குழந்தைகள் கலைக்களஞ்சியத்திலிருந்து எடுக்கப்பட்ட குயில்:4–1 என்ற சொல்லும் மூங்கில்:8–45 என்ற சொல்லும் மாதிரிக்காகக் கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழில் கலைக் களஞ்சிய அடிப்படையில் அமைந்த முதல் நூல் 'அபிதான கோசம்' என்பதாகும். இது 1902இல் வெளியிடப்பட்டது. 1910இல் 'அபிதான சிந்தாமணி' என்னும் கலைக்களஞ்சிய நூல் வெளிவந்தது. இக்கால ஆங்கிலக் கலைக்களஞ்சியம் போல் தமிழில் கலை, அறிவியல், முதலானவற்றிற்கு விரிவான கலைக் களஞ்சியம் ஒன்றை தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்டுள்ளது.




# குழந்தைகள் கலைக் களஞ்சியம்

**குயில் :** இனிமையாகக் குயில் கூவுவதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். காக்கையைப் போல் குயிலும் கறுப்பாக இருக்கும். ஆனால் காக்கையைவிடக் குயில் உருவத்தில் சிறியது. குயிலின் அலகு கூரியதாயும் சற்று வளைந்தும் இருக்கும்; வால் நீளமானது. பெண் குயிலுக்கு மட்டும் உடலில் வெண் புள்ளிகளும் சிறு வெள்ளைக் கோடுகளும் உண்டு. ஆண் குயில்தான் இனிமையாகக் கூவும். பெண் குயிலுக்கு அவ்வாறு கூவத் தெரியாது.

காடுகளிலும் மரங்களிலும் சோலைகளிலும் குயில் வாழ்கிறது. மரக்கிளைகளை விட்டுக் குயில் கிழே தரையில் இறங்காது. பழங்கள், பூச்சிகள் முதலியவற்றை இது உண்ணும்.

குயிலுக்குக் கூடு கட்டத் தெரியாது; ஆதலால் காக்கையின் கூட்டில் காக்கைக்குத் தெரியாமல் முட்டையிடுவது இதன் வழக்கம். ஆண் குயிலைக் கண்டால் காக்கைகள் அதனைத் துரத்திச் செல்லும். அச்சமயம் பார்த்துக் காக்கைக் கூட்டில் பெண்குயில் முட்டையிடும். அதே வேளையில் காக்கையின் முட்டை ஒன்றைத் தூக்கிச் சென்று அழித்துவிடும். பறந்தோடிவிடும். குயில் முட்டைக்கும் தன் முட்டைக்கும் வேறுபாடு தெரியாத காக்கை,எல்லா முட்டைகளையுமே அடைகாத்து வரும். குஞ்சு பொரித்த பிறகும் காக்கை குயில் குஞ்சிற்கு உணவு ஊட்டிவரும். பறப்பதற்குச் சக்தி பெற்றவுடன் குயில் குஞ்சு பறந்தோடிவிடும்.

பெண்குயில்



ஆண் குயில்

**மூங்கில் :** மக்களுக்கு மிகவும் பயன்படக்கூடிய தாவரங்களில் மூங்கிலும் ஒன்று. மூங்கிலைக் கொண்டு ஏணி, கூடை, ஆதாரக் கால்கள், பாய், விளையாட்டுப் பொருள்கள், இசைக்கருவிகள், ஈட்டி, வில், நீரோடுங்குழாய், மேசை, நாற்காலி முதலிய பல பொருள்களையும் செய்யலாம்.

மூங்கில் புல் குடும்பத்தைச் சேர்ந்தது. இதில் சுமார் 300 வகைகள் உண்டு. வெப்ப மண்டலப் பகுதிகளில் இந்தியா, இலங்கை, பர்மா, சீனா, ஜப்பான், தென் அமெரிக்கா ஆகிய நாடுகளில் மூங்கில் வளர்கிறது. மித வெப்பப் பகுதிகளில் மூங்கில்கள் தாழ்வான புதர்ச்செடிகளாகச் சிறுத்துவிடுகின்றன. மிகச் சிலவகை மூங்கில்கள் கொடிகளாகப் படர்வதையும் காணலாம்.

சிலவகை மூங்கில் மரங்கள் 35 மீட்டர் உயரம்வரை வளரும். அவற்றின் அடிப்பகுதி சுமார் 30 சென்டிமீட்டர் சுற்றளவுள்ளதாக இருக்கும். செழிப்பான இடங்களில் மூங்கில் நாளொன்றுக்கு 30 சென்டி மீட்டர் நீளம் வளரக்கூடும்.

மூங்கிலில் பல கணுக்கள் உண்டு. மூங்கில் புதராக அடர்ந்து வளரும். ஒரு புதரில் 30 முதல் 100 மூங்கில் வரை இருக்கும். மூங்கிலில் பொதுவாக இரண்டு கணுக்களின் இடையே உள்ள பகுதி குழாயைப்போல் இருக்கும்.

ஆனால் சில இனங்களில் இவ்வாறு குழாய்போல இல்லாமல் கெட்டியாக இருக்கும். இவை கல்மூங்கில் எனப்படும். மூங்கில் ஐந்து அல்லது ஆறு ஆண்டுகள் வளர்ந்து முதிர்ந்த பின்பு அதை வெட்டிப் பயன்படுத்தலாம்.

மூங்கில் மிக உயரமாக வளரும்வரை கிளைகள் விடுவதில்லை. பின்பு சிறிய கிளைகள் அடர்த்தியாக வளரும். மூங்கில் பூக்கள் பச்சை நிறமானவை. இவை சிறிய கதிர்களாக அடர்த்தியாகக் காணப்படும். பூக்களிலிருந்து தானியம் போன்ற விதைகள் கிடைக்கின்றன. மூங்கில்களில் பெரும்பாலானவை பல ஆண்டுகள் வாழ்ந்திருந்து ஒரே தடவை பூத்துப் பிறகு சிறிது காலத்தில் பட்டுப்போகும். சில இனங்கள் மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை பூத்துக் கொண்டு உயிர்வாழும் மற்றும் சில ஆண்டுதோறும் பூக்கும்.

மூங்கிலிலிருந்து எடுக்கும் மரக்கூழ். காகிதம் செய்ய உதவுகிறது. மூங்கில் இலை கால்நடைகளுக்கு நல்ல தீவனம். இளங்குருத்தை நீரில் ஊறவைத்தும் ஊறுகாய் போட்டும். சர்க்கரைப் பாகில் தோய்த்தும் உண்பதுண்டு. மூங்கிலின் கணுக்களுக்கிடையிலுள்ள நீர்வற்றி வேய்முத்து அல்லது மூங்கில் முத்து உண்டாகும். இதை மருந்தாகப் பயன்படுத்துவார்கள்.

மூங்கிலால் செய்யப்பட்ட பொருள்களில் சில

## பயிற்சிகள்

I. அ. 1. மாணவர்கள் சிறு சிறு குழுவாகப் பிரிந்து பின்வரும் சொற்கள் குழந்தைகள் கலைக்களஞ்சியத்தில், எந்தத் தொகுதியில், எந்தப் பக்கத்தில் உள்ளது என்பதைக் கண்டுபிடித்து எழுதவும்.

( அ ) ஊர்வன ( ஆ ) கரும்பு ( இ ) திமிங்கிலம் ( ஈ ) மேகங்கள் ( உ ) வளவால்

2 . பின்வரும் சொற்களை அகர வரிசைப்படுத்தி எழுதுக.

| மணல், | புறா, | கடல், | சிரிப்பு, | பலாமரம், |
|---|---|---|---|---|
| பறவை, | பல்லி, | பூண்டு, | காடு, | சிகரம் |

3 . ஒன்று முதல் பத்து வரை எண்ணுப் பெயர்களை எழுதி அகர வரிசைப்படுத்துக.

ஆ. விடை எழுதுக.

1. கலைக்களஞ்சியம் என்றால் என்ன ?
2. கலைக்களஞ்சியத்தின் பயன்கள் யாவை ?

II. அ. எழுவாய்க்கு ஏற்ற பயனிலையைக் கூறுக.

1. பூங்கோதை திருவிழாவிற்குச் சென்றான் / சென்றாள்.
2. வரிக்குதிரைகள் கூட்டமாகச் சென்றன / சென்றது.
3. நான் அக்காவுக்குக் கடிதம் எழுதினான் / எழுதினேன்.

ஆ. பயனிலைக்கு ஏற்ற எழுவாயைத் தேர்ந்தெடுத்துக் கூறுக.

1. நீ / நான் யாருடன் ஊருக்குச் சென்றாய் ?
2. மான்கள் / மான் துள்ளிக் குதித்தன.
3. மாணவர்கள் / மாணவன் கைப்பந்து விளையாடினர்.

இ. குறிப்புகளைக் கொண்டு நீ கொண்டாடிய 'பொங்கல்' விழா பற்றி எழுதுக.

| பொங்கல் | கரும்பு | தை | அறுவடை | புதுப்பானை | மஞ்சள் |
|---|---|---|---|---|---|

### செயல்திட்டம்.

➤ விலங்குகள், பறவைகள், பூச்சிகள் படங்களைச் சேகரிக்க. அவற்றை அகர வரிசைப்படுத்துக. ஒவ்வொன்றைப் பற்றியும் அறிந்த விவரங்களை எழுதி வருக.

துணைப்பாடம்

## விகடகவி தெனாலிராமன்

விசயநகரப் பேரரசை மன்னர் கிருஷ்ணதேவராயர் ஆட்சி செய்து வந்தார். அவருடைய அரசவை விகடகவி தெனாலிராமன். அவையோரைத் தன் நகைச்சுவைத் திறத்தினால் மகிழ்விப்பது அவன் வேலை. ஒரு நாள், மன்னர் நாட்டில் நிலவும் முக்கியப் பிரச்சினைகள் குறித்து விவாதித்துக் கொண்டிருந்தார். அப்போது தெனாலிராமன் அரசவைக்குள் நுழைந்தான். மன்னரையும் மற்றவர்களையும் பார்த்தான். மன்னரிடம் சென்றான். " மன்னரே, தங்களின் பிரச்சினை யாதோ ?" எனக் கேட்டான்.



அப்போது அவனது வருகை அனைவருக்கும் எரிச்சலைத் தந்தது. "நாங்கள் முக்கியமான பிரச்சினைக் குறித்துச் சிந்தித்துக் கொண்டிருக்கிறோம். இடையூறு செய்யாதே!" என்றார் அமைச்சர். உடனே தெனாலிராமன், "அமைச்சரே சிந்திப்பது உம் வேலை; சிரிக்க வைப்பது எம் வேலை; நீங்கள் உங்கள் வேலையைச் செய்யுங்கள். நான் என் வேலையைச் செய்கிறேன்" என்றான். தெனாலிராமனின் இப்பேச்சைக்கேட்டு அவையோர் சிரித்தனர். அமைச்சருக்குச் சற்று அவமானமாக இருந்தது.

இதைக் கவனித்த மன்னர், ''தெனாலிராமா! போதும் உன் விகடப்பேச்சு. எங்களைச் சங்கடப்படுத்தாதே'' என்றார். அதற்கும் தெனாலிராமன், "விகடமாகப் பேசினால் சிரிப்பல்லவா வரும். சங்கடம் எங்கிருந்து வரும் ?'' என்றான். ''உன்னோடு பேசிச் சமாளிக்க முடியாது'' என்றார் அமைச்சர். ''படைபலத்தைச் சமாளிக்கும் உங்களால் என் பேச்சை சமாளிக்க முடியவில்லையே!" என்றான் தெனாலிராமன். அவையோரின் சிரிப்பு அடங்க வெகு நேரம் ஆகியது.

மன்னரின் கண்கள் கோபத்தால் சிவந்தன. ''தெனாலிராமா! நிறுத்து உன் பேச்சை. இந்தப்பக்கம் உன் தலையைக் காட்டாதே! போ வெளியே!" என்றார். தெனாலிராமன் தலை கவிழ்ந்தபடியே வெளியே சென்றான். மறுநாள்.... தலையில் பானையைக் கவிழ்த்திக் கொண்டு அரசவைக்கு ஒருவன் வந்தான். அப்பானையில் பார்ப்பதற்கு வசதியாக இரு ஓட்டைகளும் மூச்சுவிட வசதியாக ஒரு ஓட்டையும் போடப்பட்டிருந்தது. "ஏய்! பானைத் தலையா! நில். யார் நீ ? எங்கே செல்கிறாய் ?'' தடுத்துக்கேட்டான் வாயிற்காவலன்.



"மன்னரைக் காண வேண்டும். உள்ளே செல்ல விடு" என்றான் பானைத் தலையன். "இங்கேயே இரு. மன்னரிடம் கேட்டு வருகிறேன்". என்று சொல்லி உள்ளே சென்றான் வாயிற்காவலன். அவன் மன்னரைப் பார்த்து, "மன்னாதி மன்னா! தங்களைப் பார்க்கப் பானையைத் தலையில் கவிழ்த்துக் கொண்டு ஒருவன் வந்துள்ளான். அவனை உள்ளே அனுமதிக்கலாமா?" என்று பணிந்து கேட்டான் வாயிற்காவலன்.

"நேற்றைய விவாதத்தின் போது தெனாலிராமனின் தொந்தரவு. இன்று அவன் இல்லை என மகிழ்ந்தேன். ம்.. சரி, சரி அப் பானைத்தலையனை வரச்சொல்" என்றார் மன்னர்.

தலையில் பானையைக் கவிழ்த்திக் கொண்டு வந்த அவனைப் பார்த்து அனைவரும் சிரித்தனர். மன்னருக்கு எரிச்சல் கலந்த வியப்பு. "யார் நீ? எங்கிருந்து வருகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்றார் கிருஷ்ணதேவராயர். அப்போது அப்பானைத்தலையன், "மன்னா! என்னைத் தெரியவில்லையா?"

"நான்தான் தெனாலிராமன்," என்றான். அனைவருக்கும் சிரிப்பு. அப்போது மன்னர், "தெனாலிராமா! என்ன இது? கோமாளித்தனம். இந்தப்பக்கம் தலையைக் காட்டக்கூடாது என்றேனே? என்ன தைரியம்? ஏன் இங்கு வந்தாய்?" என்று கோபமாகக் கேட்டார். அப்போது தெனாலிராமன், "மன்னா! தாங்கள் என் தலையைத் தானே காட்டக்கூடாது என்றீர்கள். உடலைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லையே! எனவேதான் தங்கள் சொல்படி என் தலையை மட்டும் மறைத்து விட்டு வந்துள்ளேன்" என்றான்.

அனைவரும் விழுந்து விழுந்து சிரித்தனர். அவையினரின் சிரிப்பொலி அடங்க வெகு நேரம் ஆகியது. மன்னரும் சிரித்தார். மன்னர், "கோமாளித்தனத்திலும் உன் அறிவுக்கூர்மை வெளிப்பட்டுள்ளது. சரி, சரி, பானையை எடுத்து விடு" என்றார்.

**சிந்திக்க**

- தெனாலிராமனின் செயல் பற்றி உன்னுடைய கருத்து என்ன?

# அகரமுதலி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அகழி | – | கோட்டையைச் சுற்றியுள்ள நீர் நிறைந்த பகுதி | துஞ்சார் | – | உறங்க மாட்டார் |
| அரிது | – | இயலாது | துப்பு | – | உணவு |
| அருள் | – | கருணை | துவார பாலகர் | – | வாயிற் காவலர் |
| அல்லார் | – | அல்லாதவர் | தொழுதல் | – | வணங்குதல் |
| அலகு | – | பறவையின் மூக்கு | தொன்மை | – | பழைமை |
| அவலம் | – | கேடு | நந்தி | – | எருது |
| அவித்து | – | வேகவைத்து | நல்கியது | – | கொடுத்தது |
| அறுகு | – | அறுகம்புல் | நவிலல் | – | கூறுதல் |
| ஆயுள் | – | வயது | நன்செய் | – | நெல் விளையும் நிலம் |
| ஆரும் | – | நிறைவு பெறும் | நெஞ்சுரம் | – | மன வலிமை |
| ஆன்ற | – | நிறைந்த | நெடிதுயர்ந்த | – | உயரமாக வளர்ந்த |
| இறைவை | – | நீர் இறைக்கும் கருவி | நோக்க | – | பார்க்க |
| உறுதுணை | – | பெருந்துணை | பசுந்தாள் | – | பசுமையான இலைகள் |
| எழில் | – | அழகு | பட்டுப்போகும் | – | உலர்ந்து போகும் |
| ஒற்றன் | – | உளவாளி | பண்பாடு | – | ஒழுக்கம், |
| ஓம்புவான் | – | பாதுகாப்பவன் | பருவந்து | – | துன்பம் வந்து |
| கயமை | – | கீழ்மைக் குணம் | பாமரர் | – | படிக்காதவர் |
| கருவூலம் | – | சேமிக்கும் இடம் | பார் | – | உலகம் |
| கிளையோடு | – | சுற்றத்தாரோடு | பாழ்படுதல் | – | வீணாதல் |
| குழையும் | – | வாடும் | மடமை | – | அறிவின்மை |
| கேளிர் | – | உறவினர் | மானாவாரி | – | வானம் பார்த்த பூமி |
| கையாளுவதில் | – | பயன்படுத்துவதில் | முந்தையது | – | முற்பட்டது |
| செம்மொழி | – | செம்மையான மொழி | முற்றுகை | – | சுற்றி வளைத்தல் |
| செவிமடுத்தனர் | – | கேட்டனர் | முற்றும் | – | முழுமையாக |
| செழிப்பான | – | வளமான | மெய் | – | உடல் |
| சொல்லியவண்ணம் | – | சொல்லியபடி | மேதை | – | அறிவாளி |
| சொல்லொணா | – | சொல்ல இயலாத | மேலைநாடு | – | அயல்நாடு / வெளிநாடு |
| ஞாலம் | – | உலகம் | மோப்ப | – | மோந்துபார்க்க |
| டன் | – | ஆயிரம் கிலோ | வழிமொழிதல் | – | ஒப்புக் கொள்ளல் |
| தடாகங்கள் | – | குளங்கள் | விசும்பு | – | வானம் |
| தரணி | – | உலகம் | விருந்தோம்பல் | – | விருந்தினரைப் பேணுதல் |
| தழைத்திட | – | பெருகிட, மிகுந்திட | வேதிக்கழிவு | – | நச்சுத்தன்மை உடைய கழிவுப் பொருள் |
| திரிந்து | – | மாறுபட்டு | வேய் | – | மூங்கில் |
| தீந்தமிழ் | – | இனிமையான தமிழ் | வைகலும் | – | நாள்தோறும் |

## திறன் பகுதி / திறன் (இயல் எண்)

| | | |
|---|---|---|
| **1.** | **கேட்டல்** | |
| 1.1 | விழிப்புணர்வுப் பாடல்களைக் கேட்டுப் புரிந்து கொள்ளுதல் | இயல்–5, 6,7,8 செய்யுள் |
| 1.2 | கலந்துரையாடலைக் கேட்டுப் புரிந்து கொள்ளுதல் | இயல்– 7 உரைநடை |
| 1.3 | நாடகத்தைக் கேட்டுப் புரிந்து கொள்ளுதல் | இயல்–8 உரைநடை |
| **2.** | **பேசுதல்** | |
| 2.1 | குறிப்பிட்ட தலைப்பில் பேசுதல் | இயல்–1 உரைநடை |
| 2.2 | இயல்பாக உரையாடுதல் | இயல்–7 உரைநடை |
| 2.3 | நாடங்களில் பங்கேற்று நடித்தல் | இயல்–8 உரைநடை |
| **3.** | **படித்தல்** | |
| 3.1 | எளிய எண் விவரங்களைப் படித்தறிதல் | இயல்–6 உரைநடை |
| 3.2 | அழைப்பிதழ்கள், நிகழ்ச்சி அறிவிப்புகள், துண்டு வெளியீடுகளைப் படித்தல் | இயல்–2 உரைநடை<br>இயல்–6 பயிற்சி |
| 3.3 | செய்தித்தாள் படித்தல் | |
| 3.4 | நாடகங்களைக் குரல் ஏற்றத்தாழ்வுடன் படித்தல் | இயல்–8 உரைநடை |
| **4.** | **எழுதுதல்** | |
| 4.1 | பொருள் உணர்வுக்கேற்ப இடைவெளிவிட்டு எழுதுதல் | அனைத்து இயல்கள் |
| 4.2 | பத்தியைப் படித்து வினாக்களுக்கு விடை எழுதுதல் | பயிற்சிகள் |
| 4.3 | உறவுமுறைக்கடிதம் எழுதுதல் / நாட்குறிப்பு எழுதுதல் | இயல்–3 உரைநடை |
| 4.4 | கட்டுரை / உரையாடல் எழுதுதல் | இயல்–4, 5 உரைநடை |
| **5.** | **படைப்பாற்றல்** | பயிற்சிகள் |
| 5.1 | பாடல் எழுதுதல், பாடுதல் | இயல் –8 & பயிற்சிகள் |
| 5.2 | தனிநடிப்பு | |
| 5.3 | செயல்திட்டம் – இதழ் தயாரித்தல் | பயிற்சிகள் |
| **6.** | **நடைமுறை இலக்கணம்** | |
| 6.1 | சொற்றொடர் அமைப்பு முறை அறிதல் | இயல்–8 பயிற்சிகள் |
| 6.2 | இணைப்புச் சொற்களை அறிந்து பயன்படுத்துதல் | இயல்–5 பயிற்சிகள் |
| 6.3 | மரபுத் தொடர்கள் அறிதல் | இயல்–2 பயிற்சிகள் |
| 6.4 | அறிந்து கொள்வோம் | இயல்–3, 7 பயிற்சிகள் |
| **7.** | **தானே கற்றல்** | துணைப்பாடம் – அனைத்து |
| 7.1 | சிறுசிறு கதைகளைப் படித்தல் | இயல்கள் இயல்–9 |
| 7.2 | குழந்தைகள் கலைக்களஞ்சியத்தைப் பயன்படுத்துதல் | உரைநடை |
| 7.3 | அகர முதலியைப் பயன்படுத்திப் பொருளறிதல் | அகரமுதலி |
| **8.** | **சொல்லாட்சித் திறன்** | இயல்–1,2,3,4,9 செய்யுள் |
| 8.1 | சொற்களஞ்சியம் பெருக்குதல் | பகுதிகள் மற்றும் அனைத்து இயல்கள் |